"Giveme not, O God, that blind, fool fvith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."

"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."

ஸத்யம்வத,—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."** **"To Thine Own Self beTrue."**




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம்தத்ஸத்.] [God is Love: Knowledge is Power. *Om*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

**புத்தகம் 16.]** **1908-௵ ஜூலை௴** **[சஞ்சிகை 9.**

## OUR NATIONAL ASSET:
## A "THROUGHLY CULTIVATED WILL."
## இச்சாசக்தியே இத்தேசத்தார்க்குப் பூர்வீக ஆஸ்தி.

"There lies a duty on every young man, simply because the youths of to-day would be the citizens of tomorrow That duty is that they should demonstrate to the world that they are *men of character*. "CHRACATER' is the only word which in my opinion adequately represents the sum total of those qualities which constitute the pre-eminent individuality of a great man. And not this only. It is the CHARACTER of our great men which is reckoned as one of the noblest assets of the nation to which they belong. Again it is perhaps a truism to say that it is our daily acts which mould our character. "Sow an *act* and you reap a *habit*, sow a *habit* and you reap a *character*, sow a *character* and you reap a *destiny*." Character is the force that shapes our dseires and our hopes. It is each man's *swarg*. "It is in his character that every one finds the central essence of his being, and it is from the heights of these characters, that the great personalities of history have issued forth their guiding ideas and their decisive deeds. It was the unique character of Joan of Arc that saved France. Conseqcently let us earnestly try to possess a "THOROUGHLY CULTIVATED WILL."— *Mr. Woodhouse in the Vedic Magazine.*

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டிற்கும்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைவலிதென்பர்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைக்குமூன்றிற்கும்
இஷ்டம்வலிதென்பர்ஈசன் அருளே."

—திருமந்திரம்.

நமது தேசத்து ஆஸ்தியையெல்லாம் அந்நியர் கொள்ளை கொண்டு போகிறார்களென்று பத்திரிகைகளில் பல்காலும் முறையிடுவதைப் பார்த்திருக்கிறோம். நமது சேத்திலிருந்து வெளியேபோகும் ஐஸ்வரியத்தைக் கணக்கிட்டுக் கேட்போர்கண்டு மலைக்கும்படி வரிசை வரிசையாகவும், பத்திப் பத்தியாகவும் இலக்கங்களைப் போட்டுக் காட்டுகிறவர்கள் நம்மில் பலர் இருக்கிறார்கள். ஆனால் நம் தேசத்துக்கு முக்கியமானதும், நமது க்ஷேமத்துக்கின்றியமையாததுமான பூர்வீக ஆஸ்தி யொன்று ஆதிதொட்டு நமக்குப் பொக்கிஷமாயமைந்திருக்கிறதை நம்மவர்கள் வீரியிறைத்

துச் சூரையாடி வருகிறதை யாரும் கவனிப் பாரில்லே. "பணம் பெரிதா, குணம் பெரிதா?" என்று கேட்டால், "பணமிருந்தால் போதும்" என்று சொல்லிகிறவர்களே யதிகமாயிருக்கி ருர்கள். பணம் இருந்தால் குணம் தானே வருமென்று சிலர் சொல்வதையும் கேட்டிருக் கிருேம். ஐயோ! இதைப்போல் தப்பெண் ணம் வேறு உண்டா? பணத்தைப்போல் குணத்தைக் கெடுக்கும் வைரி வேறு இல்லே யென்று சொல்லலாம். வியபசாரி யொருத்தி விடபுருஷனே மயக்கி அவனுக்குச் சுகத்தைக் கொடுக்கிறதாகச் சொல்லி அவனிடத்துள்ள கைப்பொருள் மெய்ப்பொருள் இரண்டையும் கவர்ந்து அவனேச் சந்தியில் விடுவதுபோல, பணம் குணத்தின் சீரைக் கெடுத்து ருணத் தைக் கொடுத்துக் கடைசியில் மனிதனேப் பிணத்துக்குச் சமானமாகச் செய்துவிடுகிறது. பணமகிமையொன்றே பெரிதாகக் கொண் டாடு மிடமெல்லாம் இந்தக் குற்றம் தப்பாம லிருப்பதைக் காணலாம். ஆனல் அவர்கள் செ ய்யும் வெளியாடம்பரங்களினல் உள்நாற்றம் தெரியாது மறைந்து கிடக்கும். இதனல் அனே கர் மோசம் போவதுண்டு.

உயிர்போன சவத்தை என்னதான் அலங் காரம் செய்தாலும், அதனல் அதன் முகம் அழகு பொருந்திச் சோபிக்குமா? அதற்கு அழகு கொடுத்துச் சோபிக்கச்செய்த ஆத்மா அதைவிட்டுப் பிரிந்துபோனபின் அதற்குச் செய்யும் அலங்காரங்கள் அதன்கோரத்தை ஒரு வாறு மறைத்துவைக்க உதவுமேயன்றி, சோ பையற்றபிணத்தை ஒருக்காலும் சோபிக்கச் செய்யாது. இது பிரத்தியக்ஷ பூர்வமாய் அறிய த்தக்கது. இதுபோலவே குணமில்லாதவிடத்தி லுள்ள பணமும். "பணம்" என்ற சப்தத்தை எல்லாவிதமான ஐசுவரியத்துக்கும் பொருந் தும்படியான அருத்தத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியது. ஆதிகாலம் தொட்டு இந்தியா வை சோபிக்கச் செய்தது, இத்தேசத்தின் தனதானியங்களும் பொன் வெள்ளி உலோக ங்களும் சுரங்கங்களுமல்ல. இவைகளே யெல் லாம் அனுபவித்தாளத்தக்க ஆத்மசக்தியுள்ள ரிஷிபுங்கவர்களும் இராஜரிஷிகளும் இருந்ததி னலேயே இவ்வாரியபூமி எல்லா தேசங்களி லும் மேலாகச் சோபித்தது. இந்த ஆத்ம சக்தியொன்றே இந்தியாவின் பூர்வீக ஆஸ்தி. இந்த ஆத்மசக்தி குறையக் குறைய, இந்தி யாவின் கனமும் தனமும் குறையத் தலேப்பட்டது. "அனுபவித்தாள அருகனல்லாதவனிட த்திலுள்ள தனம் அவனுக்கு ஆபத்தைவிளே க்கு" மென்பதுபோல, ஆத்மசக்திக்குறைவால் அனுபவித்தாள யோக்கியதையற்ற இந்தியா வின் ஐசுவரியம் அந்நியர்களே இத்தேசத்திற் கழைக்கலாயிற்று. அனுபவிக்கத் தெரியாத வன் ஆஸ்தி அவனேவிட்டு நீங்குவது சகஜமே!

குணமுள்ள மட்டுமேதான் மணமுண்டு. குணம் போனல் மணமும் போய்விடும். மண ம்போனபின் பணமிருந்து அதனல் என்ன பயன்? குணமுள்ள விடத்தில் பணமுமிருந் தால் "பொன்மலர்நாற்றமுடைத்து"— பொன் னல் செய்த மலருக்கு வாசனேயு முண்டானற் போலாகும். குணம் என்றல் என்ன? "குணம்" என்னும் பதத்திற்கு உள்ளபடி "தன் மை" அல்லது "ஸ்வபாவம்" என்கிற அருத் தம் பொருந்தும். குரைப்பது நாயின் குணம்; ஆதலால் அருத்தபுஷ்டியின்றி வாச்சாமாத்தி ரத்தால் வெல்லக்கருதிப் பேசுமவர்க்கெல்லாம் "நாய்க்குணம்" ஏற்பட்டிருப்பதாகச் சொல்வி ருர்கள். இப்படி ஒரு பொருளே அல்லது ஜீவ னேயொட்டி வரும்பொழுது அதனுடைய விசேஷ குணத்தைக் காட்டுவதுபோல "குண ம்" என்னும் சொல் தன்னந்தனியே, தனிமை யாக நிற்குங்கால் அது ஆத்மஸ்வபாவத்தைக் குறிக்கும். எப்படியென்றல், "தன்மை"யென் னும் பதத்திற்கு "தன்னேத்தானறிந்திருத்தல்" என்கிற அருத்தமேபொருந்தும். தன்மை,முன் னிலே, படர்க்கை, யென்கிற இலக்கணர்த்தத் தில், தானக நிற்றல், (அஹம்தத்துவமாய் இரு த்தல்,"நான்") தன்மை யெனப்படும்; தனக்கு

முன் தோன்றி நிற்றல் ("நீ" யென்கிற) முன்னிலை; நானும் நீயுமின்றி, எங்கும் படர்ந்து நிற்கும் வேற்றுமைப் பொருள் (அவன், அது,) படர்க்கையாம்.

("நானென நீயெனத் தத்துவ மிரண்டே" என்னும் திருமந்திரத்தைப் பார்க்க.) இதற்கு லக்ஷியார்த்தம் செய்யில், தானுயிருக்கும் தன்மை, தத்பத லக்ஷியப்பொருளாகாவும், தனக்கு முன்னிலையில் தோன்றி நிற்கும் பொருள், துவம்பத லக்ஷியப்பொருளாகவும், எங்குமாயிருக்கிறவேற்றுமைப்பொருளாம் (அவன், அது) அபேததர்சனமாகிய ஞானனுபவ நிலையில் அஸிபதலக்ஷியப்பொருளாகவும் இருக்கக்காணலாம். இப்படியாக தத்துவமஸி யென்னும் மஹாவாக்கியர்த்தமே, நான், நீ, அவன், அது வென்னும் வேறுபாட்டால் விளங்குவது என்று தெரியும். ஆகையால், அஹம்தத்துவமாகிய நான் என்பதை யறிந்தால், அதைபறிந்த அந்த அறிவினல் ஆத்மதரிசனம் பெற்று, அந்த ஸ்வாத்மதரிசன அறிவால் பரமாத்மாவைக் கண்டு இரண்டறக் கலக்கும் தன்மை யுறலாம். இப்படி இரண்டறக் கலந்திருக்கும் தன்மை யெதுவோ அதுவே குணம். கடவுளை சகுணம் என்றும் நிர்க்குணம் என்றும் இருவிதமாகச் சொல்வார்கள். கடவுளை ஆதியென்றும் அநாதியென்றும் சொல்வதுபோல, சகுணம் என்றும், நிர்க்குணம் என்றும் கடவுளை குணஸஹிதமாகவும் குணரஹிதமாகவும் சொல்வதுண்டு. ஆனல் உண்மையில் அவர் குணஸஹிதமானவரென்றும், குணரஹிதமானவரென்றும் வரையறைந்து சொல்லக் கூடாதவராயிருக்கிருர். உபாசனக்கிரம முறையில் சகுணேபாசனை, நிர்க்குணேபாசனை யென்று இரண்டுவிதம் ஏற்பட்டிருந்தாலும், உண்மையாகவே கடவுள் "இத்தகையன், இவ்வண்ணத்தன் என்றெழுதிக் காட்டொணுத"வராயிருக்கிருர். அப்படியானல் குணம் என்ருல் என்ன? என்கிற கேள்வி மறுபடியும் பிறக்கலாம்.

குணம் என்ருல் சத்துவ, ராஜஸ, தாமஸங்களுக்குப்பேர் என்று சாதாரணமாகச் சொல்வர். இந்த சத்துவ, ராஜஸ, தாமஸங்களுக்கு குணம் என்கிற பேர் வருவானேன்? அவை வஸ்து "இருக்குந்தன்மை"யைக் குறிக்கும் காரணத்தால் அவற்றிற்கு குணம் என்கிற பேர் வந்தது. "இருக்குந்தன்மை" உள்ளபடி பார்க்கில் ஒன்றே. அது "சும்மா விருத்தல்."

"என்னுணே, என்னுணே, யேகபிரண்
டென்னுமல் சும்மாவிருவென்று செப்பினன்

சீர்காழிநாதன்" என்று சிதம்பரஸ்வாமிகள் ஒழிவிலொடுக்கத்தில் சொல்லியிருக்கிருர். இப்படியிருத்தல் தான் குணம். இதற்கே மணமும் உண்டு. மற்ற நிலைகளெல்லாம் இதன் வேறுபாடு. பொன்னிலிருந்து பணிகள் (ஆபரணங்கள்) பலவேறு உண்டாயினபோல, இந்தவொரு குணத்திலிருந்து (ஒரு தன்மையிலிருந்து) எல்லாக் குணங்களும் (உலகத்திலிருக்குந் தன்மைகளெல்லாம்) உண்டாயின. இவைக்கு குணமாறுபாடுகள் என்று பேர். பொன்னை யறியாமல், பணியை யறிதல் கூடாததுபோல, சும்மாவிருத்தலாம் சுகநிலை யறியாமல் சுறுசுறுப்பான இதர நிலைகளையெல்லாம் அறிதல் கூடாமையாம். "சும்மா இருத்தல்" என்று ஆத்மஸ்வரூபமாய் நிற்குந்தன்மைக்குச் சொல்கிறது. ஆகையால்தான் இந்நிலையிலிருக்கப்பெற்ற இருஷிபுங்கவர்களும் இராஜரிஷிகளும் இருந்த காலத்தில் இந்தியா எல்லா குணங்களும் பொருந்தி சோபிக்கலாயிற்று. பொன்னுள்ளவன், பொன்னலான ஆபரணங்கள் செய்துபோட்டுக்கொண்டு விளங்குவான். பொன்னில்லாதவன் என்னசெய்வான்? அதுபோல "தன்னையறிந்தவன் தலைவனவன்." தன்னறிவில்லாதமூடன் தனக்கன்னியமான எதையறிந்து யாருக்குத் தலைவனுகவிருப்பன்? ஆகையால் தன்னறிவு என்பது, பணிகளுக்குப்பொன் அவசியம் என்பதுபோல, எல்லாவற்றிற்கும் அவசியம் வேண்டும். தன்னறிவு என்ருலும், ஆத்மஞானம் என்ருலும் ஒன்றே. "நான்

ஆத்மா" என்று எவனொருவன் தன்னையறிந்துள்ளானோ, அவன் தன்னிலுள்ள ஆத்மாவே ஸர்வவியாபியாய், இருப்பதைக்கண்டு ஸர்வஞ்ஞனாகிறான். "அறிவேசக்தி" யென்பது சத்தியமாதலால், ஸர்வஞ்ஞனாகும்போது ஸர்வவல்லமையுள்ளவனாகவும் ஆகிறான். அப்பொழுது "தனக்கேன்றேன்று வேண்டான்" ஆகிறான். எல்லாருக்கும் தன்னைக் கொடுக்க சித்தமாயிருக்கிறான். தானே யெல்லாமா யிருக்கிறதாக அறிந்திருக்கிறவனாதலால், பரோபகாரம் அவனுக்கு இயல்பாயமைந்த தொழிலாகிறது. பரோபகாரம் செய்யவேண்டு மென்றுழைக்குங்கால் பராசக்தியே வந்து அவனுக்கு வச்யமாகிறாள். பரோபகார புருஷனுக்கு யாதொரு உபாசனையும் வேண்டியதில்லை. அவன் செய்வதெல்லாம் பூஜையாகஏற்படுமாகையால்,அவன், உபாஸகன், உபாஸனை, உபாஸியம் என்கிற திரிபுடி தாண்டினவனாகிறான். அப்படிப்பட்ட நிலையில்லாநிலையடைந்தவன் யாரோ அவனை அவதார புருஷன் என்று சொல்கிறார்கள். அப்படிப்பட்ட மஹான்களால் தான் இந்தியா இது வரையில் முன்னுக்கு வந்தது. இனிமேலும் முன்னுக்கு வரத்தக்கது. அப்படிக்கின்றி "ஆடுதின்னி மடையர்களாலும், மாடுதின்னி மூர்க்கர்களாலும் இந்தியா ஒருக்காலும் முன்னுக்கு வராது." ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்ஸர் இந்தியாவை முன்னுக்குக் கொண்டுவருவதற்கென்றே தோன்றிய அவதாரபுருஷர்களில் ஒருவர். அவர் ஸ்வாமி விவேகாநந்தரை ஆளாக்கிவிட்டுவிட்டு மஹாஸமாதிநிலையடைந்தார். அடைந்தும் அவர் சித்த புருஷராயிருந்து நல்ல வழியில் நடக்கும் உத்தமர்க்கு வேண்டிய உதவி செய்து வருகிறார். சென்ற மாசத்துச் சஞ்சிகையில் எழுதிய "எதிர்க்காமலேதிர்த்தல்" என்பதின் முதலில், விவேகானந்தர் சொல்லியதோர் வசனத்தை இங்கிலீஷில் வரைந்துள்ளோம். பரோபகாரசிந்தையுள்ளவன் பிறருக்காகத் தன்னுடல்பொருளாவி மூன்றையும் அர்ப்பணம் செய்து, ஏழைகளுக்கிரங்கி அவர்களுக்காகத் தவிக்குங்காலம் எதுவோ, அப்பொழுதே அவனுக்கு பராசக்தியின் கிருபையினால் அபார சக்திபுண்டாகிறதென்று சொல்லி யிருக்கிறார். இவன் அர்பத்நட் கேஸில் உழைக்க நேரிட்டபொழுது அர்பத்நட் பேரில் வர்மம் சாதித்துழைத்தவனல்ல. ஏழைகளுக்கிரங்கி வருந்துங்கால் அவன் செய்த மோசத்தை வெளியாக்க வேண்டு மென்கிற சங்கல்ப முண்டாகி அதற்கு வேண்டிய சாதக சாதனங்கள் அவனையன்றி யெப்படியோ உண்டாயின. ஈசுவரசங்கல்பம் எப்படி நிறைவேறுகிற தென்பது அப்பொழுது ஸ்பஷ்டமாக விளங்கியதுபோல, அவன் அனுஷ்டித்த யோக, சமாதி, முதலான எந்த நிலையிலும், அவ்வளவு தெளிவாக விளங்கவில்லை. விதேகமுக்தர்கள் "இச்சாசக்தி"யினால் எல்லாவற்றையும் சாதித்துக் கொள்கிறார்கள் என்பது அப்பொழுது விளங்கினாற்போல், அதற்குமுன் எப்பொழுதும் விளங்கவில்லை. "இச்சாசக்தி உமாகுமாரி" யென்ற சிவசூத்தரத்தின் அருத்தம் அப்பொழுதுதான் பூரணமாக விளங்கியது. அதுமுதல் ஸ்வேச்சை யென்பதைவிட்டு பரேச்சையே இச்சையாகக்கொண்டு, பரைவசப்பட்டு "பரைபோகம்" செய்து, அவசம் அடங்கி, அறிவுவசத்தனாகி, அறிவே சரண் என்று "அறிவுருவாம்" தேவியைத் தொழுது எதையும் அவளுக்குத் தொண்டாகச் செய்துவரத் தலைப்படலாயிற்று. வந்தே மாதரம் என்ற மந்திரத்தின் இரகசியம் உள்ளபடி இத்தருணத்தில் தான் உள்ளத்திறைக்கலாயிற்று. வரவர இந்தியாவில் நடக்கும் விஷயங்களை அகக்கண் கொண்டுபார்க்கும் அறிவாளிகளும் இந்த அபிப்பிராயத்துக்கு வருவதைக்காணச் சந்தோஷமுண்டாகிறது. உதாரணமாக, மிஸ்டர் வூட்ஹௌஸ் என்னும் ஆங்கிலேய விவேகி யொருவர் இந்தியாவின் ஆஸ்தி யெல்லாம் குணத்தைப் பொறுத்ததாகவிருக்கிறதென்றும், எத்தேசமும் அதிலுள்ள மஹான்கள் குணவிசேஷத்தாலே சிறடைந்து விளங்குகிறதென்றும், மஹான்கள் குணமும் சிறுகச்சிறுக அவர்கள் செய்யும் வெகுகால

அப்பியாசத்தால் தானே விர்த்தியாகி விளங்குகிறதென்றும் சொல்லியிருப்பதை, இங்கிலீஷில் தானே எடுத்து வரைந்திருக்கிறோம். குணத்தை வளர்க்கும் வழிக்கு "ஸ்ரீவித்யா உபாசனை" யென்று சொல்கிறது. இதைப்பற்றிய இரகசியங்களையெல்லாம்வெளியிடக்கூடிய அளவுக்கு "ஸ்ரீவித்தை" அல்லது (The Holy Science of Character-Building) என்கிற தலைப்பெயரிட்டு ஏற்கனவே பிரசுரஞ் செய்திருக்கிறோம். *

விதிவசமென்றால் என்ன? தன்னை யறிந்தவன் தன்வயத்தனாகிறானே யன்றி விதிவசத்தனவதில்லை.

"தான்முன்னஞ்செய்தவிதிவழிதானல்லால்
வான்முன்னஞ்செய்தங்குவைத்ததோர் மாட்டி
[ல்லை''

யென்னும் திருமந்திரத்தி னுண்மையை தன்னையறிந்த துங்கியரே யறிவார்களன்றி, அங்கியர் அறியார்.

குணநிதி தேடும் வழிக்கே "ஸ்ரீ வித்தை" யென்றுபேர். பணநிதி தேடியலைவோர் குணநிதி தேடும் குப்தவித்தையை அறியார். குணநிதி தேடியவர்களிடமிருந்தே தேசத்துக்குப் பெருமிதமான சீரும் சிறப்பு முண்டாகிறது. இதனால் பணம் அவசியமில்லை யென்று அருத்தமில்லை. குதிரையை முன்னும் வண்டியைப் பின்னுமாகக் கட்டினால் நன்றாக சவாரி செய்யலாம். வண்டியை முன்னும் குதிரையைப் பின்னுமாக இடம் மாற்றிக் கட்டினால், வண்டி போகுமா? அது போலவே, குணநிதியைப் பிரதானமாகவும் பணநிதியை அதற்குப் பின்னும் வைத்துழைத்தால் எல்லா பாக்கியமு முண்டாகும். *

பணமே பிரதானமென்றுழைத்தால் பிணமாகத்தான் போகவரும். இந்த குணம் அமையும் வழி யென்ன வென்றால்:—

"முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்" என்ற விதியை யனுசரித்து, ஒரு சற்காரியத்தைச் செய்தால் அதுவே அப்பியாசமாக அமையும். அப்பியாசத்தை விடாது தொடர்பிடியாய்ச் செய்துகொண்டு வந்தால், அதிலிருந்து சற்குணம் ஏற்படும். சற்குணமுதிர்வே நற்பயன் விளைக்கும் வினைப்பயனாகும். இந்த வினைப்பயனையே விதியென்பார்கள். "நன்மை விதைத்தால் நன்மை விளையும், தீமைவிதைத்தால் தீமைவிளையும்" என்கிற விதிப்படி, நல்வினை செய்யத்தொடங்கிப் பழகினால் நல்விதியாகவும், தீவினை செய்யத் தொடங்கிப் பழகினால் பொல்லாவிதியாகவும் முடியும். இப்படியாக வினையிலிருந்து பழக்கமும், பழக்கத்தினால் ஸ்வபாவமென்கிற குணமும், ஸ்வபாவ முதிர்ச்சியால் விதிப்பயனும் விளையும். இந்த வினைப்பயிர் செய்வோர் அவரவர்கள் விதைக்கிற படி விளைவறுத்தனுபவிப்பார்கள். இப்பொழுது நம்மவர்கள் முன்செய்த தீவினைகளெல்லாம் திரண்டுருண்டு வளர்ந்து பயனைத்தந்துகொண்டிருக்கிறது. இப்பொழுது நல்வினைப்பயிர்வைத்து ஆத்மவியவசாயம் செய்தால், வினைமுற்றிப் பழக்கமாகிப், பழக்கமுற்றி ஸ்வபாவமாகி, ஸ்வபாவமுற்றி ஸ்வதந்திரமென்னும் ஸ்வாராஜ்யப்பலனை யீன்றும். இது சுருதிவாக்கியம். ஆகையால் ஸ்வராஜ்யம் வேண்டுமென்கிறவர்கள் தங்கள் மனத்தைப் பண்படுத்தி நல்லெண்ணம் என்கிற நல்லேர்கட்டி, நல்வினை யென்கிற நல்வித்து விதைத்து, உண்மைக்குழைத்தல் என்கிற நன்னீர்பாய்ச்சி, நற்பயிர்ச்சி யென்னும் வியவசாயம் செய்துவருவார்களாயின், அவர்கள் கிரமேண மனோவாக்குக் காய சித்திகளைப் பெற்றுக்கடைசியில்இந்த சித்திகளின் முதிர்பயனை ஸ்வராஜ்யம் என்கிற சிறந்த பலனை அஹத்தும் புறத்தும் பெற்றுப் பேரும் கீர்த்தியும் பொரு

* See Godward Ho! Third Series, entitled "Srividya, or The Holy Science of Character-Building." Only a very few copies available in Complete Sets at Rs 5 per set. Apply with remittance to the Lalita Publishing Co, as the book is not sent by V. P. P.

† Cf. "Seek first the Kingdom of God and everything else will be added unto You."

ந்தப் பெருவாழ்வு வாழ்ந்து, பிறகு ஸர்வபலத்தியாக மென்கிற மஹாபிநிஷ்கிரமணத்தால் என்றுமழியாத நித்தியவாழ்வுமெய்துவார்கள். இப்படி உண்மைக்குழைத்து உள்ளபடி அதன் பலனையனுபவிக்க முயலாது, வெடிகுண்டு, யந்திரங்களும், வீண்வர்மங்களும் சாதித்து உயிருக்குத்துணிந்து உயிர்க்கொலை செய்யப்புகுவதால், உயிர்ச்சேதமேயன்றி வேறு சுகிர்தமொன்றும் விளையாது. இதை நம்மவர்கள் மனத்திலிருத்தி நிதானம் வைத்து ஆலோஜித்து உழைக்க வேண்டும். வீணுக ஆத்திரப்பட்டு அழிந்துபோவதில் பயனில்லை. ஆத்மசக்தியால் அநாத்மர்களை வெல்லலாமே யன்றி முறட்டுத்தனத்தால் யாரையும் வெல்ல முடியாது. இது இராஜாங்கத்தார், இராஜாங்கவைரிகள் இருவருக்கும் பொருத்தமான புத்திமதியானுலும், இராஜாங்கவைரிகள் இதை முக்கியமாக கவனிக்கவேண்டும். பிள்ளையார்பிடிக்க குரங்காய் முடிந்ததுபோல், ஆத்மசக்தியை விர்த்தி செய்ய வேண்டுமென்று செய்த போதனையை அசுரத்தன்மையால் அநர்த்தம்செய்து அக்கிரமம் விளைக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். இந்தியா முன்னுக்கு வருவதற்கு இன்றியமையாத சாதனமாக வேண்டியது "இச்சாசக்தி." "Thoroughly Cultivated Will" என்றுசொல்வது "இச்சாசக்தி" யோடொன்றுகப்பொருந்தும். இந்த இஷ்டத்தின் சக்தி அபாரமானது. மண்கொட்டு, குந்தாலி (கோடரி) இருப்புப்பாரை யெல்லாவற்றிலும் "இஷ்டம் வலிது" என்றும், இப்படி வஜ்ரத்தன்மை பொருந்திய இஷ்டம் எதுவோ அதுவே உபாசனுமுறையில் "வஜ்ரேசுவரி" என்றும், "ஈசனருள்," "உமாகுமாரி" என்றும் சொல்லப்படும்.

திருமந்திரம்,

"கொட்டுக்குந்தாலி யிரண்டே யிரண்டிற்கும்
கொட்டுக்குந்தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந்தாலிக்கும் பாரைக்கு மூன்றிற்கும்
இஷ்டம் வலிதென்பரீசனருளே."

இதற்குத்தான் "Thoroughly Cultivated Will" என்றுசொல்கிறது. திரிகோணதேவதைகளில் ஒன்று இதுவாம். அன்பு (ஆசை), இஷ்டம் (இச்சை), குணசம்பத்து (perfection of Character) இம்மூன்றும் சேர்ந்தது பரிபூரண தேவதாஸ்வரூப காமேசராம். இவரோடு அத்வைதமாய்க் கலந்து இவர் மடியில் வீற்றிருப்பவள், லலிதாபரதேவதை.

இவளே ஆத்மாவுக்கு அதிஷ்டான தேவதை. இந்த அதிஷ்டான தேவதையை உபாசித்து இவளோடு ஒன்றுபடக் கலந்தவர்களுக்கு ஸர்வசுதந்தரங்களும் ஸகலபாக்கியங்களும் உண்டாகுமென்பது திண்ணம்.

---

## "CASH DOWN:" OR, MONEY-COMPENSATION FOR MARRIAGE.

## "எதிர்ஜாமீன்."

"எதிர்ஜாமீன்" என்றால் என்ன? ஜாமீன் என்பது ஒரு ஹிந்துஸ்தானி வார்த்தை. நஷ்டத்துக்கு ஈடுகட்டிக்கொடுத்தால் அதற்கு ஜாமீன் கொடுக்கிறது என்றுபேர். "எதிர் ஜாமீன்" என்றால் நேர்நேராகக் கையில்கொடுக்கும் ரொக்கத்துக்குச் சொல்லுகிறதென்று சொல்கிறார்கள். கடன், உடன் பட்டால் ஜாமீன் கொடுக்கிறதாகச் சொல்வதுண்டு. அந்தமாதிரியாக கலியாணத்தில் பெண்ணைக் கொடுத்தால் அதற்கு "எதிர்ஜாமீன்" கொடுக்கிறதென்றால் என்ன? பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதற்காக கலியாணப்பந்தலில் நேர்நேராகக்கொடுக்குந் தொகைக்கு "எதிர்ஜாமீன்" என்று சொல்கிறதாம். "எதிர்ஜாமீன்" கொடுத்துக் கல்யாணம் செய்து கொடுக்கிறதென்றால், பெண்ணைக கல்யாணம் செய்துகொள்ளும் புருஷன் அப்பெண்ணை மணம் புரிவதால் வரும் நஷ்டிக்கு ஈடாக, கல்யாணப்பந்தலில் எதிர் எதிராக நின்று ரொக்கம் கொடுத்துப் பெண்ணையும் கொடுத்தலுக்குச் சொல்கிறதாம். பெண்ணைப் பாத்திரமறிந்து உத்தம வரனுக்குக் கந்யாதானம் செய்யவேண்டு மென்பது சாஸ்திர சம்மதம். அப்படிக்கின்றி ஒருகாலத்தில் பணம் வாங்கிக் கொண்டு பெண்ணைக் கொடுத்தது முண்டு

அதற்கு "கன்யாசோல்கம்" என்று சொல்லி வந்தார்கள். பின்னர் பெண்கள் அதிகரித்து, நல்ல வரன்கள் குறைந்துள்ள காலத்தில், மாப்பிள்ளைக்கு கன்யாதானம் செய்யும்பொழுது பெண்ணைப்பெற்றவன் மனமுவந்து கொடுக்கும் தக்ஷிணைக்கு பதிலாக, இவ்வளவு தொகை "தக்ஷிணையாகக்" கொடுக்க வேண்டுமென்று முன்னதாகப் பேசிக்கொண்டு அத்தொகைக்கு வைதீக மரியாதையாக "வரதக்ஷிணை" யென்று சொல்லி வந்தார்கள். இப்படி நடந்துவந்தபோது கேடுகெட்ட மானிடர் சிலர் அக்கிரமமாகக்காசுபறித்துவர, அதற்கு ஆற்றமாட்டாத பெண்ணைப்பெற்ற ஏழை, முதலில் கேட்டதையெல்லாம் தருவதாகச் சொல்லி, தாலிகட்டும் வரையில் ஏதோ சரியாக நடந்து கொண்டு, அப்புறம் ஆற்ருக் கொடுமையால் படுத்திக்கொள்ள நேரிட்டது. இதனல் கொண்டு கொடுத்த விடங்களில் மனஸ்தாப முண்டாகி அது முத்தி விரோதமாக முடிந்து, அந்த விரோதம் கோர்ட்டு, கச்சேரி வரையில் போகும்படி நேரிட்டதைப் பார்த்தும் கேட்டுமிருக்கிருேம். இப்பொழுது அந்த வைதீகமரியாதையும் போய் ஜாதகம் கேட்டால், கொடுக்கும்போதே "எதிர்ஜாமீன்" இவ்வளவு கொடுக்க வேண்டுமென்று தொகையைக் குறிப்பிட்டு கெடுப் போட்டு அதற்குள் பதில் வராவிட்டால் பக்கத்தில் பேசி யேற்பாடு செய்து விடுவதாகப் பயமுறுத்தி யெழுதுகிருர்கள். இப்படி வைதிகவிரோதமும் அநாகரிகமுமான காரியம் செய்வதில் முதலாயிருப்பவர்கள் புரோகிதர்களே. இந்தப் புரோகிதர்களைப் போல் மானம்கெட்டவர்கள் வேறு இல்லை. வயிற்றுப் பிழைப்புக்காக என்ன வேண்டுமானலும் செய்கிருர்கள். பிரத்தியேகத்தில் இவர்கள் செய்யும் அக்கிரமங்களைப் பற்றி நாம் குறையிடவில்லை. எத்தேசத்திலும் எக்காலத்திலும் பிரத்தியேகமாகப் பார்க்கில் நல்லவர்களும் கெட்டவர்களும் எங்கும் கலந்தேயிருப்பார்கள். ஒருவரிடத்திலேயே நற்குணமும் தீக்குணமும் சேர்ந்திருப்பதுமுண்டு. அவையெல்லாம் திருத்தமுடியாது. ஆனல் ஒருவகுப்பார் முற்றும் கெட்டவர்களாக விருப்பாரேயாயின், அதனல் நல்ல சகவாசத்திற்கிடமில்லாமற் போகிறது. இது காலக்கொடுமை யென்று சொல்கிருர்கள். அப்படியே யிருக்கட்டும்! "காலக்கொடுமை" நேரிட்டால் அதைத் திருத்தும் வழி யென்ன? "காலம்" என்பது ஒடும் ஸ்வபாவமுள்ளது. நீரோட்டம் போகும் போக்கில் வழியிலுள்ளதை யெல்லாம் கூட அடித்துக் கொண்டு போவது போல்,காலவோட்டமும்,அதன் வழியில் காணும் வினைகளை விர்த்தி செய்து கொண்டுபோகிறது. நல்வினை, தீவினை யெதுவானலும் காலத்தினல் விர்த்தியடைகிறது. வினை முத்தினல் அது சம்பிரதாயம் ஆகிறது. சம்பிரதாயம் முத்தினல் அது ஸம்ஸகாரம் ஆகிறது. ஸம்ஸ்காரத்தின் முதிர்ச்சியே "வினைப்பயன்" அல்லது விதியென்று சொல்கிறது.

வேதோக்தமாக அனுஷ்டிக்கப்பட்டுவந்த கன்யாதானம், வேதத்தின்உட்கருத்துணரமாட்டாத மௌட்டியர்கள் செய்கையால் கன்யா சோல்சமாக மாறி, அது முத்தி (இதனல் வரும் பயன்முத்தி) வர வர வியபசாரமாக முடிந்தது. இப்பொழுது "வரதக்ஷிணை" யென்னும் வேதோக்த வைதீக அனுஷ்டானம், அப்படியே "வர சொல்கமாக" மாறி, அதுமுத்தி "எதிர்ஜாமீன்" என்கிறலஜ்ஜைகெட்ட வழக்கத்தில் வந்துமுடிந்திருக்கிறது. எதிர்ஜாமீன், போலிவுகாளைக்குக் கூலிகோடுக்கிறமாதிரி, கேவலம் மிருகத்தன்மையானதோர் இழிதொழில்வேலையில் முடியும். மனிதன் பொலிவுகாளையாகும்பொழுது, ஸ்திரீகள் கேவலம் பசுக்களாகவே இழிந்து விடுவார்கள். இப்படி நமது முன்னேர்களான இருஷிகள் ஏற்படுத்திய இகபரசாதனமான ஆத்மவிவாகதர்மம், கேவலம் மிருகத்தன்மையானதோர் இழிதொழிலில் வந்து முடிகிறபொழுது, விவாகஸம்ஸகாரம் வேரோடுகளையப்பட்டுப் போக நேரிடும். மனிதனும் என் மிருகங்களை

ப்போல் வசிக்கக்கூடாது? கேவலம் பிரஜாவிர்த்தி காரணமாகமட்டும் நடக்கும் ஸ்திரீ-புருஷ சம்பந்தத்துக்குப் பசுதர்மம் என்று சொல்கிறது.

பிரஜாவிருத்தியே பிரதானமாகவின்றி ஆத்ம க்ஷேமத்தை முக்கியமாகக் கொண்டு மற்ற விர்த்திகளை தனுகரணபுவன போகாதி லக்ஷணங்களை யறிவதற்கானதோர் சாதனமாத்திரமாக அனுஷ்டித்து ஆத்மோத்தாரணஞ் செய்து, ஆத்மவிருத்தியைநாடியுழைத்து, ஆசையையடக்கி, அன்பைப் பெருக்கி, ஆத்மானாத்ம விவேகத்தால், வைராக்கிய சித்தனாகி ஆத்மானுசந்தானம் செய்து ஸ்வாத்மதரிசனம் பெற்று பரமாத்மாவோடு தான் இரண்டறக்கலந்து நிற்கும் பெருவாழ்வு பெறுவதை ஜன்மசாபல்யமாகக் கொண்டு இல்லறதர்மத்தை யனுசரிப்பதற்கு "சதி-பதி தர்மம்" என்று சொல்கிறது. இதுவே பிரம்மத்துக்கும் மாயைக்குமுள்ள சம்பந்தத்தைத் தெரிவிக்கும் உத்தம வழியாம். இந்த உத்தம வழியை யனுசரித்து நடப்பதற்கான விதிவிலக்குகள் என்னவுண்டோ, அவைக்கு "இல்லற தர்மம்" என்று பேர். இந்த இல்லற தர்மத்தில் அனுபவிக்கும் காமபோகங்களெல்லாம் இந்திரிய நிக்ரகத்தை யனுஷ்டித்து, இந்திரிய நிக்ரகத்துக்கு அனுகூலமாக ஏற்பட்டனவேயன்றி இந்திரியவழிப்பட்டுழல்வதற்காகவல்ல.

அஞ்சுமடக்கடக்கென்பர்அறிவிலார்
அஞ்சுமடக்கும்அமரருமங்கில்லை
அஞ்சுமடக்கில்அசேதனமாமென்றிட்டு
அஞ்சுமடக்காஅறிவறிந்தேனே."

என்பது திருமூலதேவர் செய்தருளிய திருமந்திரோபதேசம்.

இந்த உபதேசத்தின் உண்மையை இல்லற தர்மமியற்றிக் கடைசியில் கிருதகிர்த்தியர்களான திருவள்ளுவரைப்போன்ற இல்லறஞானிகளே யுள்ளபடி யறிவார்கள்.

"அஞ்சுமடக்கலின்" அருமையறிந்தே, பெரியோர் இல்லறவழியை இகபரசுகத்துக்கு இன்றியமையாததோர் சாதனமாக ஏற்படுத்தினார்கள்.

மனுஷன் பசு-பதி-ரூபன். பசுவும் ஆவன்; பதியும் ஆவன். அவன் பசுப்பிராயமா யிருக்குங் காலத்தில், (காமக்குரோதாதி விகாரங்களுக்குட்பட்டவனாயிருக்கையில்,) தன்னிடத்து கூடமாக அமைந்துள்ள பதிலக்ஷணத்தை யவன் அறிவதில்லை. தன்னைத்தான் அடக்கியாளலாமென்கிற நிச்சயம் எப்பொழுது பிறக்கிறதோ அப்பொழுது முதல் அவன் பதிலக்ஷணத்தை யறிந்தவனாகிறான். ஆனால் நீடித்த அப்பியாசத்தினாலுண்டான வாசனைகளை உடனே ஒருமட்டாகப் போக்குவது தேக-மனோ-தர்மத்துக்கு ஒவ்வாதாகையால் தேகவாசனை யேறினபடியே அதைக்குறைத்து, தேகத்தை மனதிலொடுக்கி, மனத்தை விஞ்ஞானத்திலொடுக்கி விஞ்ஞானமாம் அறிவை ஆனந்தத்திலொடுக்கி, அந்த ஆனந்தமும் அழிந்தவிடத்துள்ள அழிவில்லாத அறிவு எதுவோ அதுவே தான் என்கிற "தத்துவமஸி" மஹாவாக்கிய நிச்சயம் தோன்றி, அந்த நிச்சயம் ஸ்வானுபவத்தில் நிலைத்து நிலைத்தநிலையிலிருந்து அப்பியசித்துவர, அந்நிலை தானாக உறுதிப்பட்டு, உறுதிப்பட்ட அந்நிலையும் சகஜானுபவத்தில் "ஒர்நிலை" யென்றுகண்டுநழுவிவிடக், கடைசியாயுள்ள அனுபவம் எதுவோ அதுவே மனிதனுடைய பூர்ணநிலை. அந்தப் பரிபூர்ணநிலையடைந்து சகஜநிலையடையுமட்டும் தர்மத்தையொட்டியே நடக்கவேண்டும். "நான் தேகம்" என்கிறபாவனையுள்ளமட்டும், தேகதர்மத்தை யொட்டியே நடக்கவேண்டும். "நான் மனம்" என்கிற பாவனையுள்ளமட்டும், மனோதர்மம் தவறாது நடந்துகொள்ளல் வேண்டும். "நான் அறிவுருவாயிருக்கிறேன்" என்கிற பாவனையுள்ளவரையில், அறிவுக்குள்ள தர்மம் தவறாது நடந்துகொள்ளல் வேண்டும். "நான் ஆனந்தரூபி" யென்கிற பாவனையுதித்தால் அது முதிர்ந்து வளர்ந்து அழியுமட்டும், ஆனந்தமய தர்மத்தை யொட்டி யனுசரித்துவரல்வேண்டும். அந்த ஆனந்தமும் அழிந்து சுகவெளியானால், அங்கே சுககனமயாயிருப்பதொன்றைத் தவிர அதற்குவேறே விதிநிஷேதமில்லை. அன்புநிலையறி

ந்து அன்புருவேயானர்க்குத் தான் அந்த சுகானுபவநிலை சித்திக்கும். கல்யாணம் செய்து கொள்ளும் பொழுதே "பொலிவுகாளைக்குக் கட்டணம் விதித்து வாங்குவதுபோல்" "எதிர் ஜாமீன்" கேட்கும் மானிடபுஞ்சங்களை மணந்து ஒரு பெண் என்ன சுகத்தை யனுபவிக்கப் போகிறாள்? இகத்தில் சுகமா? அல்லது, பரத்தில் சுகமா? பிரஜாவிர்த்தி ஈசுவரதர்மத்தை யொட்டியது. நரசங்கற்ப மின்றியே அது நடக்கும். மனுஷஜன்ம மெடுத்தவர்கள் "தானே தனக்குப் பகையும் நட்டானும்" என்கிற திருமந்திரப்படி, தன்னைப் பசுலோகத்துக்கோ, பதிலோகத்துக்கோ கொண்டுபோய்ச் சேர்க்கும் சக்தியுடையவர்களாயிருக்கிறார்கள்.

பசுப்பிராயமான மனிதர்கள் பசுதர்மத்தை யனுஷ்டிக்கத் தெரியாமல் அனுஷ்டித்து, விவாகத்துக்குப் பேச்சுக்கொடுக்கையிலேயே, தாம் பசுலோகத்துக்குப் போக மூட்டைகட்டிக் கொண்டிருக்கிறவர்கள் என்று காட்டி, தாங்கள் இரண்டுகால்பிராணிகளாக சீக்கிரம் ஆகவேண்டுமென்று துரிதப்படுவார் போல், "வழிச்செலவுக்குப் பணம்" தேடுபவரொக்க, "எதிர் ஜாமீன்" வாங்கி பசுப்பிராயமாயிருந்து பசுலோகமே கதியாக அடையச் சித்தமாயிருந்தால், அவர்களைத் தடுப்பார் யார்? அவர்களுக்கு வழித்துணையாகத் தாங்கள் பெற்ற பெண்களைக் கொடுத்து அவர்களையும் அந்தப் பசுலோகத்துக்கு அனுப்பப், பெற்றவர்களுக்கு இஷடந்தானே என்பது ஒன்றே கேள்வி. இந்தியா ஒரு தேசமாக முன்போல் பேர்பெற்று முன்னுக்கு வரவேண்டுமானல் இப்பொழுது பிறந்து வளர்ந்து மலிந்து கிடக்கும் பசுக்களையெல்லாம் யஜ்ஞம் செய்து, அதன் பலனை மனுஷ புத்தியுள்ள ஆத்மாக்கள் இந்தப் புண்யபூமியில் அவதாரமாக வேண்டுமென்று தேவதைகளைப்பிரார்த்தித்துக்கொள்ளல்வேண்டும். இந்தப்பசுயஜ்ஞம் செய்யத்தக்கவர்கள்பரிசுத்தமான கன்யாரத்னங்களே. பரிசுத்தமனசுடைய ஒரு பெண் தன் மனத்தையடக்கித் தனக்கேற்ற புருஷன் வாய்க்க வேண்டுமென்று தவம் புரிந்தால், தேவர்களெல்லாம் அவர்களிருப்பிடத்தை விட்டு மனுஷாவதாரம் கொள்கிறார்களென்று பெரியோர் போதித்திருக்கிறார்கள்.

தமயந்தியை மணம்செய்யவென்று தேவர்களெல்லாம் மாறுவேடம்போட்டுத் திரிந்து சுயம்வரமண்டபத்தில் நளனோடுநளனயுட்கார்ந்து பார்த்தும் ஏமாந்துபோகவில்லையா? ஆகையால், "எதிர்ஜாமீன்" கேட்கும் காளைகளை பொலிவுமாட்டை விலக்குபயோகிப்பதுபோல, உபயோகிக்க இஷ்டமுள்ளவர்கள் உபயோகிக்கட்டுமென்று, நல்லசிந்தை யுள்ளவர்கள் ஆத்மவிவாகமே சிலாக்கியமானதென்று, மனுஷதர்மவிதியை விட்டு விலகாதிருப்பார்களாயின், அவர்களுக்குப் புத்திவரக் காரணமாகும். பிரஹ்மசாரிக்கும், பொலிவுகாளைக்குமுள்ள வித்யாசம் ஏற்பட்டால், அதுவே தேசத்துக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணும். இந்த ஆரியதேசத்தில் ஆங்கிலேய பாஷையும் நாகரிகமும் ஏற்பட்டகாரணத்தினல் பிரஹ்மசரிய தர்மம் தலைகவிழ்ந்துபோனல், அதற்குஈடாக உத்தமமான ஜன்மமெடுத்த கன்யாரத்னங்களையும், கூடப் பலிகொடுக்க வேண்டுமென்கிற கட்டாயம் ஏற்பட்டுவிட்டதாகச் சொல்வது சுத்தப் பிசகு. "காசுக்கிரண்டு கன்னியர்" இக்காலத்தில்கிடைப்பதாக விருப்பதாகப் ஒரு நண்பர் காலசுபாவத்தையொட்டி ஸ்ரீவாணீவிலாஸினியில் எழுதியிருக்கிறார். கன்யாரத்னம் கோடிதனம் கொடுத்தாலும்கிடைக்கரிதாம். பசுதர்மத்தையொட்டிப் பாமரர்கள் நடந்துகொண்டால் விவேகிகளும் அந்தமூட வழக்கத்தையொட்டியே மனம் திகைத்தெழுதவேண்டுமா? வார்த்தைகளுக்குண்மையாயுள்ள அருத்தத்தை விட்டு அநர்த்தம் விளைவித்துக் கொண்டு பேசுகிறதானல் எண்ணவேண்டுமானலும் எழுதலாம். நவீனநாகரிகபுஞ்சங்கள் கொண்டாடும் "நாவெல்" என்னும் நவீனக்கதைகள் ஆதியில், நமது புராண இதிஹாஸங்கள் பூர்ணாத்மாக்களால்

எழுதப்பட்டன போல், விவேகபுருஷர்கள் மனோதத்துவங்களை விளக்குவதற்காக நவீனமான கற்பனாலங்காரங்களால், நவீனமாக ஸ்திரீபுருடர்களை யுண்டாக்கி, மானஸ சங்கல்பத்தாலுண்டானதோர் கந்தர்ப்பலோகத்தில் கந்தர்ப்ப ஸ்திரீ புருஷர்கள் விவகாரத்தை வர்ணித்தெழுதியதோர் அத்புதக்கதைகளாம். இவை பாமரஜனங்களுக்கும், படித்தும் படிப்பு வாசனையொட்டாத ஏட்டுப்படிப்பும், சோற்றுப்படிப்பும் படித்து உலகவாசனை மிகுந்த மாந்தர்களுக்கும் மனோவிலாஸத்தின் நவநவமான உல்லாசத்தைக் காட்டி அவர்கள் உய்யும் பொருட்டு அவர்கள் மனோவிர்த்தியை நாடியெழுதப்பட்டனவாம். கைப்பொருளில்லாக் கசடர்களெல்லாம், மெய்ப்பொருளுணராது, மையல்கொண்ட ஜனங்களை மயக்கி இவர்கள் மனோபீஷ்டப்படி யெல்லாம் அவர்களுக்கு மனக்கிளர்ச்சி யுண்டுபண்ணுவ தொன்றையே பிரதானமாகக்கருதி அற்புதக் கதைகள் எழுத ஆரம்பித்ததால் மேற்றிசையில் உண்டான அநர்த்தம் இவ்வளவவ்வளவென்று சொல்லி முடியாது. அவர்கள் வழியைப் பின்பற்றி நம்மவர்களும் ஆடுபோல் அவ்வழியில் நடந்து வருகிறார்கள். இதன்பயன் போகப்போக நன்றாய்ப்பலிக்கும். ஆத்மபுத்தியை விட்டு இரவல்புத்தியைக்கொண்டு பிழைக்குமவர்கள் எங்கும் முன்னுக்கு வந்ததில்லை. இனிவரப் போவதுமில்லை. இவ்வுலகில் அவர்கள் பெறும் வாழ்வெல்லாம் பேய்வாழ்வும், பொய்வாழ்வுமன்றி, மெய்வாழ்வு அவர்களுக்கு இதனால் சித்திப்பதில்லை. இது சத்தியம். சத்தியம்.



## "GOVERNMENT BY GUESS-WORK."

## "ஒற்றையோ, இரட்டையோ?"

---

நான் சிறுவனாயிருந்த பொழுது எனக்கு வயதில் பெரியவளான என் சகோதரி புளியின்விரை வைத்து விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்த்து நானும் விளையாட வருவேன் என்று அழுததுண்டு. அப்பொழுது அன்பேயுருவாய் வந்தமர்ந்த என் தமக்கை என்னை சமாதானப்படுத்தும்பொருட்டு, "பாதியாட்டத்தில் வந்து கலக்காமலிருந்தால், இந்த ஆட்டம் முடிந்ததும் நீயும் நானும், புளியின் விரை ஆடலாம்" என்று சொல்லுவள். அவளுக்கு சரியாக நானும் விளையாடலாம் என்கிற சந்தோஷத்தில் அவள்பெரிய பெண்களோடு அதிக சாமர்த்தியமும் கைத்தேர்ச்சியும் வேண்டிய விளையாட்டுகள் விளையாடும்பொழுது இடையூறு ஒன்றும் செய்யாமல் அதிக கவனமாய் அவ்விளையாட்டைப் பார்த்துக் கொண்டேயிருப்பேன். பிறகு என் தமக்கை என்னைக் கூப்பிட்டு "நீயும் நானும் விளையாடலாம் வா" என்பாள். எனக்கு சந்தோஷம் பொங்கிவிடும். என்னோடு அந்த மாதிரியான விளையாட்டே விளையாடப் போகிறாளென்று வெகு ஆர்ப்பாடமாய் நான் ஆட்டத்துக்கு உட்காருவேன். ஆனால் மிகவும் சிறுபையனான எனக்கு கைத்தேர்ச்சியும் பழக்கமும் மிக வேண்டிய பெரிய விளையாட்டுகள் விளையாடவராது என்று அவளுக்குத் தெரியும். ஆதலால் சிறிது நேரம் நான் விரைகளையெல்லாம் வாரி யிறைத்து விளையாடத் தெரியாமல் விளையாடுவதைப் பார்த்திருந்து, பிறகு, "இந்த விளையாட்டுப்போதும்: வேறே ஆட்டம் ஆடலாம் வா: அதிலேதான் உன் சமர்த்தை நான் அறியப்போகிறேன்!" என்று பாதி பரிகாசமாகவும் பாதி நிஜமாகவும் சொல்லுவாள். என்சமர்த்தைக் காட்டவேண்டுமென்கிற ஆவல்மேற்கொண்டு, என்ன புதிய விளையாட்டினால் நம்சமர்த்தைப் பரிசோதிக்கப் போகிறாளோ என்று அவள் முகத்தையே பார்

த்துக்கொண்டிருப்பேன். அப்பொழுது அவள் புளியின்விரைகளையெல்லாம் ஒன்றாகக் குவித்து அதில் ஒரு கை புளியின்விரையையெடுத்து மூடிவைத்துக்கொண்டு "ஒற்றையோ,இரட்டையோ?" என்று கேள்விகேட்பாள். முதலில் விழிப்பேன். பிறகு கையிலுள்ள விரைகளை இரட்டை இரட்டையாகப் பிரித்துக்கொண்டு போனால் கடைசியில் மிஞ்சும் விரை ஒற்றையாக விருக்குமா இரட்டையாக விருக்குமா சொல்ல வேண்டுமென்று சொல்லிக்கொடுத்துக் கேட்பாள். உடனே மேட்டுவளையைப்பார்த்து வெகு ஆலோசனைசெய்து, ஒற்றையென்றும், இரட்டையென்றும் சொல்வதற்கு யாதொரு துப்பும் தெரியாமல், ஒற்றையென்று சொல்லலாமா, இரட்டையென்று சொல்லலாமா," என்று எனக்குள்ளேயே கேட்டுக் கொண்டு, மனதுக்குள் ஒற்றையென்று சொல்ல நினைப்பேன்; தப்பாக விருந்தால் என்ன செய்கிறதென்று உடனே அதைமறந்து பின்னும் மனதுக்குள் உடனே இரட்டையென்று சொல்லிக் கொள்வேன். அதுவும் தப்பாக விருக்கலாமென்று தோன்றும். உடனே "இல்லை: ஒற்றை!" யென்று மனதுக்குள் சொல்லிக்கொள்வேன். இப்படி மேட்டுவளையைப்பார்த்துக்கொண்டே மனதுக்குள் ஒற்றையென்றும், இரட்டையென்றும் நிதானித்துச் சொல்ல துப்பறியாமல், "ஒற்றை, இரட்டை" என்கிற வார்த்தைகளையே மனதுக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொள்வேன். இப்படி மனதுக்குள் தானே ஒன்றை விட்டு ஒன்றைத் திருப்பித்திருப்பிப் பற்றி 'இதுவல்ல, அது;' 'அதுவல்ல, இது;' என்று ஒன்றைப்பற்றி நிற்கையில் மற்றொன்றில் மனம் பாய 'ஒற்றை, இரட்டை' என்னும் இரண்டில் ஒன்றை நிச்சயமாய்ப் பற்றி நிற்க முடியாமல், இரண்டையும் ஒன்றுவிட்டொன்றைப்பற்றிநின்று மனோசஞ்சலத்தினால் கன்னம் சிவந்து முகம் பளபளப்புக் காணும் பொழுது "எத்தனைநாழிகை ! சீக்கிரம் சொல்லு!" என்று அதட்டிக்கேட்க, அப்பொழுது மனதில் என்னசொல்லிக் கொண்டிருக்கிறேனோ அது என்னையன்றி யென்வாயினால் வந்துவிடும். உடனே "இதோ பார்ப்போம்!" என்றுகையில்மூடி வைத்துக்கொண்டிருந்த விரையைத் திறந்து, இரட்டை இரட்டையாகப் பிரித்துவைத்துக் கொண்டே போவள். நான் சொன்னபடி அது ஒற்றையாகவோ, இரட்டையாகவோ இருந்துவிட்டால், எனக்கு சந்தோஷம் பொறுக்க மாட்டாமல் "பார்த்தையா! பார்த்தையா! நான் உள்ளத்தைச்சொல்லிவிட்டேன். நீ மூடிவைத்துக்கொண்டிருந்ததை நான் கண்டுபிடித்துவிட்டேனே." என்றுசொல்லி, சந்தோஷ மிகுதியால் கூச்சல்போட்டு ஆர்ப்பரிப்பேன். என் தமக்கையும், "பலே கெட்டிக்காரன் !" என்று தட்டிக்கொடுத்து "இன்னொரு ஆட்டம்!" என்றுஇன்னமும் அதிகமான விரைகளை யெடுத்து இருகைகளிலும் மூடிக் கொண்டு "ஒற்றையோ இரட்டையோ? இப்பொழுதுசொல் பார்ப்போம்!" என்று வெகு சரஸமாய்க் கேட்பள். பின்னும் முன்போல் விழிப்பேன்! பழையபடியே, அவள் அதட்டிக் கேட்கும் பொழுது என் மனத்திலுள்ளது வெளி வந்து விடும் ! எண்ணிப்பார்த்தால் இந்த விசை தப்பாக விருக்கும்! உடனே நான் "போனவிசை நான் சொல்லவில்லையா? இன்னொரு தரம் பார்ப்போம்!" என்று இன்னொரு ஆட்டம்கேட்பேன். இப்படியாக நான் சொல்வது பலித்தால் அவள் இன்னொரு ஆட்டம் கேட்பதும், தோற்றால் நான் இன்னொரு ஆட்டம் கேட்பதுமாக முடிவின்றி இருவரும் பொழுது போவது தெரியாமல் விளையாடிக் கொண்டிருப்போம்.

இப்பொழுது இத்தேசத்தையாளும் இராஜப்பிரதிநிதி சபையில், வெடிமருந்து மசோதா, பத்திரிகைகள் குற்றம் செய்ய ஏவுதலை யடக்குவதற்கான மசோதா, ஆகிய இரண்டு சட்ட மசோதாக்களை ஒரேநாளில் சட்ட நிரூபணசபையில் ஆலோசனைக்குக் கொண்டு வந்து உடனே சட்டமாக பாஸ்செய்வதற்கென்று ஜூன் மீ 8உ திங்கட்கிழமை ஸிம்லாவில்

கூடிய இந்தியாசட்டநிருபணசபை மீட்டிங்கில் கவர்ன்மெண்டு மெம்பர்களும் இராஜப்பிரதிநிதிபவர்களும் பேசியதை நினைக்க நினைக்க நான் குழந்தையாக விருந்த காலத்தில் என் தமக்கையோடு "ஒற்றையோ, இரட்டையோ? என்று புளியின்விரை விளையாடியது அடக்க முடியாமல் ஞாபகத்துக்கு வருகிறது! வெடிகுண்டு அக்கிரமங்களை அடக்க வேண்டியது அவசியம்; இதற்கு இரண்டு சொல்வார் யாருமில்லை. ஆனால் அந்த அக்கிரமங்களை யடக்குவ தெப்படி? இங்கே தான் 'ஒற்றையோ, இரட்டையோ?" என்கிற கேள்வி பிறக்கிறது. குண்டுவெடி அக்கிரமம் செய்த குற்றவாளிகள் பிடிபட்டு விசாரணையி லிருக்கிறார்கள். இந்த அக்கிரமத்துக்குக் காரணம் அவர்கள் மாத்திரம் தானா அல்லது அவர்களுக்குப் பின்னால் வேறு ஜனங்களிருந்து தூண்டுகிறார்களோ என்பது கேள்வி. உள்நாட்டு மந்திரியான ஸர் ஹார்வி ஆடம்ஸன் இந்த வெடிகுண்டு அக்கிரமம் செய்யத் தலைப்பட்டிருக்கும் இராஜாங்க வைரிகள் அவர் மட்டில் தனியாக வில்லை; அவர்களுக்கு உடந்தையாக நன்றாகப் படித்துத் தேர்ந்த விவேகிகள் மிதநியாய் அவர்கள் பங்கிலிருந்து தூண்டுகிறார்கள் என்று சொன்னார். ஆனால் அவர் அப்படிச் சொன்னதை நிதர்சனமாக ரூபிக்கத் துப்பொன்றும் ஏற்படவில்லை. இதை யறிந்து இராஜப்பிரதிநிதியவர்கள், "ஒற்றையா, இரட்டையா," என்கிற விளையாட்டுப்போல் கவர்ன்மெண்டார் ஏதோ உத்தேசமாக ஒன்றை நினைத்து அதைக் கொண்டு நடக்க வேண்டியவர்களா யிருக்கிறார்கள். கைமூடிக் குள்ளிருக்கும் புளியின் விரைபோல் போதுமனம்" (Public mind, திருமூலர் இதைப் "பொதுஅகம்" என்று சொல்கிறார்) என்கிற கைமூடிக்குள்ளிருக்கும் "எண்ணங்கள்" என்னும் புளியின்விரைகள் "ஒற்றையோ, இரட்டையோ?" வென்று சொல்லத் தெரியாமல் தவிக்கிறோமென்று ஒப்புக்கொண்டார். போதுமனம் என்கிற திரை அதற்குள்ளிருக்கும் எண்ணங்கள் ஒரகமானதா, இரண்டகமுள்ளதா என்று நிச்சயமாய் கவர்ன்மெண்டார் தெரிந்துகொள்ள முடியாமல் உண்மையை மறைக்கிறது. இந்தத் திரையைத் தூக்கினால் கவர்ன்மெண்டாருக்கும் இவ்விசாலமான இந்தியாவில் வசிக்கும் பலவேறுபட்ட ஜாதி மதஸ்தர்களுக்கும் நலமாயிருக்குமென்று சொன்னார். "ததாஸ்து!" ஆனால் இத்திரையைத் தூக்குவதெப்படி? கவர்ன்மெண்டார் தூக்கிப் பார்க்க வேண்டியதா, அல்லது ஜனங்கள் திறந்து காட்டுகிறதா? "போதுமனம்" ஒருவர் இருவர்மனமல்ல. நூறு அல்லது ஆயிரம் பேர்கள் மனமுமல்ல. இன்னும் சொல்லப் போனால் லக்ஷம் கோடி ஜனங்களின் மனமுமல்ல. ஏனென்றால் ஜனங்களுடைய மனம் எக்காலத்திலும் ஒன்றையே பற்றி நிற்கிற தில்லை. மனமே ஒரு நிலைப்பட்டதில்லை. "மற்றொன்று மற்றொன்று மனோபவம்" என்றாள் என் தாய். மனதின் எண்ணம் ஒன்றை விட்டொன்று பற்றும் ஸ்வபாவமானதாக விருக்கிறது. மேற்றிசை நாகரிக விமர்சையில், ஜனங்களுடைய பொதுமனம் இன்னதென்றறிய எலெக்ஷன்களும் வோட்டுச்சீட்டுகளும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இதனால் போதுமனம் குறித்த ஒருகாலத்தில் எப்படியிருக்கிற தென்று அறியக்கூடுமோனாலும் எலெக்ஷன் கெடுபிடியில், அனேகர் பலவித தந்திரங்களினால், ஜனங்கள் மனதைக் கவர்ந்து அதைத் தங்களுக்கு வேண்டிய வழியில் திருப்பி விடுகிற சாமார்த்தியம் படைத்திருப்பதால், எலெக்ஷன் முடிவில் "உன் தந்திரம் பலித்ததா, என் தந்திரம் பலித்ததா?" என்று கேட்கும்படியிருக்கிறது. ஜனங்கள் பிரத்தியேகநபர்களாக விருந்து (வியஷ்டிரூபத்தில்) தேகமனுதிகரணங்களினால் சுகதுக்காதி போகங்களை யனுபவிப்பதில் விருப்பு வெறுப்புள்ளவர்களாக விருப்பதுபோல, சமஷ்டி ரூபத்திலும் (ஜனப்பொதுவில்) அவர்களுக்கு ஒரு ரூபமும் மனமும், அதற்கேற்றபடி ஆகார விகாராதி சேஷ்டைகளும், விருப்பு வெறுப்பு வளர்ச்சி குறைதல் முதலிய விகாரங்களும்

உண்டு. பல்கோடி அணுக்கள் கூடி ரக்தமென்றும், நாடியென்றும் நரம்பென்றும், தோல், மஜ்ஜை, அஸ்தியென்றும் பலரூப விகாரங்களாகி இவ்விகாரங்களெல்லாம் ஒன்று சேர்ந்தமைந்தது ஒரு மனுஷதேகமாவது போல, பல்கோடி ஜனங்களும், ஜீவகோடிகளும் சேர்ந்தமைந்த விசுவரூபமொன்றிருக்கிறது. அந்த ரூபமுடையவனை வைஸ்வானரன் என்றும் விராட்புருஷன் என்றும் சொல்லுவர். இந்த விசுவரூபதரிசனம் பெற்றவர் யாரோ அவரே "பொதுமனம்" அல்லது "போதுஅகம்" என்று சொல்லும் (Public Mind) கைமூடிக்கு ஒப்பிட்டுக் காட்டிய திரையைக்காணப் பெறும் பாக்கியம் பெறுவார்கள். அவர்களும் அந்தப் பொதுமனதுக்கு அதிஷ்டான தேவதையான தைஜஸன் என்னும் புருஷனைத் தங்களுடைய தேஜோரூபமனசால் (ஹிருதய சுத்தி வாய்ந்த சுத்தமனதால்) பூஜித்து (உபாசித்து) அவன் அருள்பெற்றாலன்றி அறிய முடியாது. இவ்விருவருக்கும் காரணமாயிருக்கிற உத்தமபுருஷன் ஒருவனிருக்கிறான். அவன் பேர் பிராஞ்ஞன். அவன் சுகரூப சாக்ஷிமாத்திரமா யுள்ளவன். இம்மூவரும் வியஷ்டி மனிதனுக்குள்ள ஸ்தூல, சூக்ஷ்ம காரண சரீரங்களுக்கு ஒப்பான சமஷ்டிரூப "பொதுஜன" சரீர அதிஷ்டான தேவதைகள். இப்படி மனிதனுக்கு ஸ்வபாவமா யுள்ள சரீரத்திரயங்களின் தத்துவங்களை தன்னுள் தானே ஆராய்ந்து தன்னறிவுபெற்று தத்துவதரிசியாகி விளங்குகிறவன் யாரோ அவனுக்கே "ஆவரணம்" என்று சொல்லும் திரையைத் தூக்கிப் பார்க்கும் சக்தியுண்டு. நான் ஸ்தூலத்தில் குழந்தையாயிருந்தபொழுது என் ஆவலைத் தீர்க்க என்னோடு விளையாடின அன்பேயுருவாயமைந்த என் தமக்கைக்கு என்னை விட சூக்ஷ்ம புத்தியெப்படி யதிகமாயிருந்ததோ அப்படிப் போல, ஹிருதயசுத்தி, தன்னறிவு என்னும் சாதனங்களால் ஆத்மரூப "அருட்டுழவி" யான தத்துவதரிசிக்கும் மேலாய் அவனிலும் பெரியவளாய் "அறிவுரு"வாம் தேவி ஒன்பது திரைகள் போட்டுக்கொண்டு நவாவரணமத்தியிலுள்ள அன்பேயுருவாயமர்ந்த ஆத்மப்பிரகாச ரூப பிந்து பீடத்தில் வீற்றிருக்கும் காமேசர் மடியில் ஸ்வாத்மானந்த பூர்ணஸ்வரூபியா யுட்கார்ந்துகொண்டு, லீலார்த்தமாக இப்பிரபஞ்சத்தை யவளது சக்திரூப விளையாட்டான ஐந்தொழில்களால் படைத்துக்; காத்து, அழித்து, மூடித், திறந்து முற்றும் விளையாட்டாக அவள் குழந்தைகளோடு சல்லாப சம்பாஷணைகள் செய்து விளையாடி வருகிறாள். சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களோடு திரோபவானுக்ரீகங்களும் அவள் தொழிலே. அவள் அகம்பாவம் தடித்தவர்களுக்குத் தன்னுடைய விளையாட்டின் மர்மம் தெரியாதபடி திரைபோட்டு மூடிவிட்டு தான் விளையாடும் பெரிய விளையாட்டுகளுக்கு இடையூறில்லாதபடி அவர்களுக்கு வேறு போக்குக் காட்டிக் காக்கவைத்து, தன்னருள் பெற்ற மஹாத்துக்களோடு தான் விளையாடும் பெரிய விளையாட்டு ஆடியானபின், அகம்பாவம் தடித்த அறியாக் குழந்தைகள் மனதைக் களிப்பிக்கும்பொருட்டு, என் தமக்கை யென்னோடு "ஒற்றையோ, இரட்டையோ?" என்கிற விளையாட்டு விளையாடினது போல், "த்வந்த்வபந்தம்" என்கிற கண்மூடியினால் அவர்கள் அகக்கண்ணைக் கட்டிவிட்டு, திரோபவம் என்கிற திரை மூடிபோட்டுத் தத்துவங்களை யெல்லாம் அதற்குள் மூடிவைத்துக் கொண்டு "ஒற்றையோ, இரட்டையோ?" என்று கேட்டு சின்ன விளையாட்டு விளையாடுகிறாள். அகம்பாவத்தால் அறிவிழந்த குழந்தைகள் நாம் தான் இராஜ்யமாளப் பிறந்தோமென்று எண்ணி மமதைகொண்டு மேட்டுவளையைப் பார்த்து விழித்த என்னைப் போல், மலையுச்சியிலேறி யுட்கார்ந்துகொண்டு காலசக்ரம் சுழலும் மர்மமுணராமல் "ஒற்றையோ, இரட்டையோ?" என்கிற விளையாட்டு விளையாடுகிறார்கள். நான் சிறுவனாயிருந்து பெரியவனாகிப் படித்துத் தேறிப் பரீக்ஷையும் கொடுத்து பத்திரிகைபோடத் தொடங்கி இராஜாங்க விஷயங்களைப் பற்றி

பெழுதச் சிந்தித்த பொழுது, "இராஜப்பிர திசிதிய வர்களைப் போன்றவர்கள் தெய்வமோ பூதமோ, அல்லது வேதாளம்தானோ!" வென்று மலைத்ததுண்டு. இப்பொழுது என் தாயை யறிந்து அவள் மகிமையை யுணர்ந்து, அவளுக்குப் பிரியமான இரகசிய நாமங்களால் அவளை "ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராஜ்ஞீ, ஸ்ரீமத் ஸிம்ஹாஸனேசுவரீ, சிதக்னிகுண்டஸம்பூதா, தேவகாரிய ஸமுத்யதா" என்று நாவாறப் போற்றி மனதாறப் பணிந்து தொழுது அவளது நவ ஆவரணங்களின் மகிமையைக் கண்டபின், அவள், மஹாமேதாவிகளென்று நினைத்துக்கொண்டிருக்கு மவர்களை யெல்லாம் "ஒற்றையோ, இரட்டையோ?" என்று † விரைவைத்து விளையாடி அவர்கள் மனம் சலிக்கச் செய்யும் வேடிக்கையைப் பார்க்க துக்கம் ஒரு பக்கமும் வெட்கம் ஒரு பக்கமுமாக லஜ்ஜைப்படுத்த, அவள் ஆர்வமொருபக்கம் பூர்வமான அவள் திருவடியைப் பற்றிநிற்கும் மனத்தைப் பூரிக்கச் செய்கிறது. என் தாய் விளையாட்டின் மஹிமையை யார் அறிய வல்லார்? ஓம் லலிதாம்பிகாயை நம:

---

## THE BEAUTIES OF KAMBAN.

## கம்பநாட்டார் காப்பிய அழகுகள்

பின்வரும் செய்யுட்கள் ஸ்ரீமத் கம்பராமாயணம் பாலகாண்டம் வேள்விப் படலத்தில் மாவலி வரலாற்றில் மாவலி தன்பால் மூவடி மண்ணேற்ற வாமனமூர்த்திக்குக் கொடுக்கவுற்ற தானத்தைக் கொடுக்க வேண்டாமென்று தடுத்த சுக்கிராசாரியனை நோக்கிக் கூறியவை.

1. நினைக்கிலை, யென்கை நிமிர்ந்திட, வந்து
தனக்கியலாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரியானது கைத்தல மென்னின்,
எனக்கிதன் மேனல மியாதுகொல்? என்றான்.

† என்தமக்கைக்குப் புளியின்விரையாக விருந்தது என் தாய்க்கு "ஸர்வபீஜாக்யாமுத்திரை" யென்று சொல்லும் பீஜசின்னங்களாய் விளங்குகிறது.

(இ-ள்) ஏ! சுக்கிராசாரிய! நீ ஆலோசனையில்லாமல் சொல்லுகின்றாய். என்கைமேலாக எனக்கு முன்வந்து தன் மேன்மைக்குக் குறைவாகும்படித் தாழ்ந்து "தா" வென்று நீட்டுவது மேலாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் திருக்கரமேயானால் எனக்கு இதனில் மேலாகப் பெறத்தகும் நன்மை யாதுள்ளது? என்று மாவலி சொன்னான்.

'ஏற்பதிகழ்ச்சி' யாதலின், தனக்கியலாவகை தாழ்வது என்றார். அகில லோகங்களுக்கும் நாயகனாகிய பெரியோன் என்பது தோன்ற தாழ்வில் கனக்கரியான் என்றார். கனம்-மேகம். 'எனக்கிதன்மேல் நலம் யாது?'-ஒன்றும் இல்லை யென்பதை வற்புறுத்தியது. மேலோர் தம்மிடத் தொன்றை ஏற்கப்பெறுவது கீழோருக்குப் பெருமையாதலின் அவ்வாறு கூறினன். (1)

2. துன்னினர் துன்னல, ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூல்வலர் முன்வந்
துன்னிய தான முயர்ந்தவர் கொள்க
என்னி, னிவன்றனி யாவ ருயர்ந்தார்?

(இ-ள்) தமக்கு முன் வந்து தாம் கொடுக்கக் கருதிய தானத்தை உயர்ந்தோர் ஒருவர் கொள்ள வரின், அவ்வாறு கொள்பவர் உறவினரென்றும் பகைவரென்றும் வேத சாஸ்திரங்களைக் கற்றறிந்த பெரியோர்கள் சொல்லமாட்டார்கள். அவரது உயர்ச்சி ஒன்றையே கருதிக் கொடுப்பார்கள். இப்போது என்முன் ஏற்று நின்ற இந்தத் திருமாலினும் உயர்ந்தவர் யாவருள்ளார்? ஒருவரும் இல்லையாதலின் எனக்கு மற்றொன்றையும் சிந்தியாமல் கொடுத்தலே முறைமையா மென்றனன். (2)

3. வெள்ளியை யாதல் விளம்பினை, மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில? வின்னுயி ரேனும்,
கொள்ளுத றீது, கொடுப்பது நன்றால்.

(இ-ள்) உன் பெயருக் கேற்ப நீ (வெள்ளியை) அறிவின்மையை யுடையையாதலின் இவ்வாறு தடுத்துக் கூறினாய். மேலோர்கள் தமது வண்மைக் குணம்விளங்க ஏற்றவர்களுக்குக்

கொடுத்தலே முறைமையாகும். அவ்வாறன்றிக் கொடாமல் மறுக்கின், அதனினும் இகழ்ச்சியைத் தரும் செய்கைகள் ஒன்றும் இல்லை. தமது உயிரே கொடுக்கும் பொருளும், கொள்ளும் பொருளுமாயினும் ஒருவரிடம் கொள்ளுதல் இகழ்ச்சியேயாம். ஒருவர்க்குக் கொடுப்பது பெருமையேயாம்.

வெண்மை-அறிவின்மை. என்னுவ என்சில-வழங்காது மறுத்தல் போல இகழ்ச்சியைத் தருவன யாவை யென்று வருவித்துப்பொருள் கொள்ளற்பாலது. என்?-என்றது இல்லை யென்றபடி.

இன்னுயிரேனும் - எவ்வளவு அருமையான பொருளாயினும், ஒருவர்க்கு உயிரினும் சிறந்ததில்லை யாதலின் அங்ஙனம் கூறினர். (3)

4. மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள், மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்!
வீய்ந்தவ ரென்பவர், வீய்ந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

(இ-ள்.) உலகத்தில் காலகதியினலே உயிரிழந்தவர்கள் இறந்து போனவரல்லர். அவர்களுக்கு நேரும் துன்பம் அவ்வளவு பெரிதன்று. வறுமையால் வருந்தி யிரப்பவர்களே உயிரோ டிருப்பினும் இறந்தவரென்று சொல்லத்தக்கவர். அதாவது இரப்பவர்களுக்கு நேரும் துன்பம் இறத்தற்றுன்பத்திலும் பெரிதாகும் என்றபடி. தமது பூதவுடம் பழியப் பெறினும் ஈகையினலே புகழுடம்பைப் பெற்றவர்களே இறந்தபோதினும் இறவாதிருக்கப் பெற்றவராவர்.

இரந்தவர் வீய்ந்தவரென்றது துன்பம் பற்றியன்றிச் சிறுமைபற்றி யாயினுமாம். உயிரிருந்தும்நடைப்பிணமாவார்கள் என்பதாம். (4)

5. அடுப்ப வரும்பழி செய்நரு மல்லர்,
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை, தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதோர் கேடிலை யென்றான்.

(இ-ள்.) ஒருவருக்குப் பகையாவார் அடுத்தடுத்து மிகுதியாகப் பொறுத்தற்கரிய தீங்குகளைச் செய்பவர்களேயல்லர். பின்பு யாவரென்னில், தாம் ஒரு பொருளைத் தானம் கொடுக்கக் கருதியபோது எதிர்நின்று கொடுக்கவேண்டா மென்று தடுப்பவர்களே யாவர். அப்படித் தடுப்பவர்கள் கொடுப்பவர்களைக் கொடாமற்செய்து கெடுத்தலே யன்றித் தங்களையும்கெடுப்பவராவர். ஆகையினலே கொடுப்பதை விலக்கலினும்கொடிய தீங்கு வேறில்லை யென்றான்.

அறத்தைச் செய்ய வொட்டாமல் தடுப்பவர் இம்மைக்கண்ணன்றி மறுமைக்கண்ணும் கேடு விளைவிப்பவராதலின் அவரை அரும் பழி செய்பவரினும் மேலான சத்துருக்களாகக் கூறினர். "ஈவது விலக்கேல்" என்றார் ஔவையாரும். (5)

6. கட்டுரையிற்றம கைத்துள போதே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே.

(இ-ள்.) அறநூல்களிற் சொல்லிய உறுதிமொழிப்படித் தம்கையிற் பொருளுள்ளபோதே பிறருக்குக் கொடுத்து அதனல் கீர்த்தியும் புண்யமும்பெற முயல்பவர்களுக்கு ஆத்மலாபத்தைக் கெடுத்துக் கெடுதியை விளைவிக்கும்கொடிய சத்துருவாயிருப்பது உலோப குணமாகும். அதுபோலவே கைப் பொருளைக் கொடுக்கவேண்டாமென்று விலக்குகின்றவர்களும் பகைவரே ஆவார்கள்.

கைத்து - கையிலுள்ளதாகிய பொருள். பொருள் நிலையன்றாதலின் 'உள்ளபோதே இட்டு' என்றார். கொடுத்தலால் புகழும் அறமும் இரண்டும் ஒருங்கே உண்டாகின்றன. மற்றப்பகைவர் உடலை வருத்துவாராவர். இவர்களோ உயிரையும் உணர்வையும் அழித்து நரகத்துக்கு ஆளாக்குகின்றாராதலின் 'உட்டெறு வெம்பகை' என்றார்.

வேறு.

7. எடுத்தொரு வருக்கொருவ ரீவதனின்முன்னே
தடுப்பது நின்க்கழகிதோ; தகைவில் வெள்ளி!
கொடுப்பது விலக்குகொடியோ யுனது சுற்றம்
உடுப்பதவு முண்பதவு மின்றிவிடு கின்றாய்.

(இ-ள்) ஒருவர் தம்பொருளை யெடுத்து யாசகர்களுக்குக் கொடுக்கும்போது அப்பொருளைக் கொடுக்க வொட்டாமல் தடுப்பது உனக்கு முறைமையாகுமா? அற்பபுத்தியையுடைய சுக்கிரனே! கொடுத்தலை விலக்கும் கொடியோனே! இப்படிச் செய்வது உனக்கு நன்மையன்று. இதனால் நீயேயன்றி உன் சுற்றத்தாரும் உண்ணச் சோறும் உடுக்கத் துணியு மின்றி வறுமையால் வருந்த வேண்டி வரும் நிச்சயம். 'விடுகின்றாய்'-விடுவது நிச்சயம என்னும் பொருளில் வந்தது.

எஸ். முத்து ஐயர், பி- ஏ.

---

## MAHISUTA—A NOVEL.

## மஹீஸுதா.

(ஓர் ஹிந்துமாது எழுதியது.)

4-ம் பரிச்சேதம்.

"ஸர்வமங்களத்தைத் தரும் ஸர்வேசுவரியைத் தியானித்தால் சகல கஷ்டங்களும் நீங்கும். தேவியை தரிசித்தால் இஷ்டஸித்திகளுண்டாகும். மனம் ஸந்தோஷ நிலைமையிலிருக்கும். ஈசுவரியை ஸதா ஸ்மரிப்போமாக. நீ யோசனையைவிடு. பிரதிதினமும் பார்வதிதேவியைப் பணிந்து பூஜை செய். அற்பமதியுள்ளவர்கள் செய்யும் ஆலோசனை ஒரு போதும் ஈடேறாது. மஹீஸுதா! உனக்கு ஒரு குறைவுமில்லை. பெற்ற தாயிருக்கும்போது நமக்கென்ன கவலை. எழுந்திரு போவோம். உன் தந்தையின் எண்ணம்கூட பேதித்துவிட்டது. நிரக்ஷரகுக்ஷியான ரகுபதிசந்தையும்நான் எளிதில் விடமாட்டேன். அவனை உனக்கு ஊழியனாக்குவதுடன் உன் புருஷனுக்கும் வேலையாளாகச் செய்கிறேன். அந்த குடுக்கைமூஞ்சிக்கோஸநீ மனைவியாக வேண்டும்!" என்று மஞ்சரி கூறினாள். மஹீஸுதை தேவியை ஸ்தோத்திரம் செய்வதில் பிரியங்கொண்டவள். மஞ்சரியின் வாக்கப்படியே தினந்தோறும் நதியில் நீராடி நீலகண்டேசுவராலயம் சென்று நானாவித பரிமள புஷ்பங்களால் பகவதியை அர்ச்சித்து உத்தம கீதங்களைப் பாடி வந்தாள். மஞ்சரிசதுரையானதால் மஹீஸுதையின் மனம் வருந்தாவண்ணம் வேடிக்கை, விநோதங்களால் திருப்தி செய்வாள். அம்பிகை தன் ஸஹோதரனை மஹீஸுதையின் அரண்மனைக்கு அடிக்கடி செல்லும்படி கூறினதால் ரகுபதிசந்த் ஏதாவதொருகாரியத்தைச்சாக்கிட்டுவருவான். மஞ்சரி அவனை வெகு மரியாதையோடு அழைத்து மஹீஸுதையினெதிரில் ரகுபதிசந்தை விடுவாள். ராஜகுமாரி அவனைப் பார்த்தவுடன் "மஞ்சரீ! இவர் எந்த லோகவாஸி! என்ன ஸௌந்தர்யம்!" என்பாள். ரகுபதிசந்த், தன்னைக்கண்டு மஹீசுதை ஆசைப்பட்டாள், இனி பயமில்லையென்று ஆநந்தமடைவான். அவனை மஞ்சரி அத்துடன் விடுவாளா?

"ஹே ராஜகுமாரா! என்னசெய்யலாம்! என் எஜமானி உன்னைப் பரீக்ஷை செய்யவேண்டுமென்கிறாள். உனக்கோ வித்தை தெரியாது. அதுபோனால் போகட்டுமென்று நான் சொல்லியும் அவள் ஒப்புக்கொள்ளவில்லை. நாளையமுதல் நீ என்னிடம் கல்வி கற்றுக்கொள்ளுகிறாயா? உன்னைப்போன்ற புத்திசாலிக்கு அது ஒரு கஷ்டமில்லை. என்னைமட்டும் மறந்துவிடாதே. உனக்கே மஹீஸுதையை நான் விவாகம் செய்துவைக்கிறேன். ஸம்மதந்தானா!" என்பாள்.

ரகுபதிசந்த், "மஞ்சரீ! நீ என்ன சொன்னாலும் கேட்கிறேன். திரவியம் தருகிறேன். உன்னையே தெய்வமாய் வேண்டுமானாலும் வணங்குகிறேன். என்னைமட்டும் மஹீஸுதை மணந்தால் போதும்! ராஜ்யம் பிறர் கொண்டு போகாவண்ணம் காப்பாற்றினால் போதும்!"

என்பான். மஞ்சரி அவனை "பயப்படாதே!" என்று சொல்லுவாள்.

அன்றுமுதல் ரகுபதிசந்துக்கு அ, ஆ, இ, ஈ, கற்றுக் கொடுத்தாள். அவன் மண்டையில் ஒன்றும் ஏறவில்லை. மஞ்சரி கணக்குச் சொல்லிக்கொடுப்பாள். அவன் அதை மந்திரம்போல் முணுமுணுப்பான். இன்றைய தினம் நீ பாடம் நன்றாய்க் கற்றுக்கொண்டாய்! ராஜகுமாரியிடம் பரீக்ஷை கொடுக்க வேண்டும் வருகிறாயா? இல்லாவிட்டால் அவள் உன்னைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டாள்: தெரியுமா! என்பாள்.

இந்த சாக்கிலாவது மஹீஸுதையின் தரிசனத்தையும் குரலையும் கேட்கலாமென்று சந்தோஷத்தோடு படித்ததை மறவாமல் ஒப்புவிப்பதாய் மஞ்சரியிடம் கூறுவான். மஹீஸுதையை பரீக்ஷிக்கும்படி மஞ்சரி சொல்லுவாள். அவள் "ரகுபதி! அறுபத்தேழும் மூன்றும் சேர்ந்தால் எத்தனை?" யென்றதும் ரகுபதி முப்பது என்பான். பத்தொன்பதுக் கப்புறமென்ன என்றால், தொண்ணூற்றைந்து என்று மறுமொழிவரும். 'ஆ' எழுத்துக்கப்பால் என்ன அக்ஷரமென்று கேட்டால் 'டோ' வருமென்பான். நீ ராஜகுமாரனுபிற்றே உனக்கு இந்தியாவின் பூர்வசரித்திரங்கள் தெரிந்திருக்கும். பீமஸேனனுக்கும் தாசரதிக்கும் எவ்விதமான பாந்தவியமுண்டு, அதை விவரமாய்த் தெரிவி! என்பாள். ரகுபதி தலையைச் சொரிந்துகொண்டு மூக்கின் துவாரத்தில் விரலைவிட்டு ஆந்தைபோல் வாய்திறவாமல் விழிப்பான். மஞ்சரி "அம்மணீ, தேவரகஸ்யத்தை அவர் ஸங்கேதத்தால் வெளியிடுகிறார்: வாய்திறக்க மாட்டார்" என்பாள். மஹீஸுதை தலையிலுள்ள பேனுக்கும் மூக்கிலுள்ள புழுவுக்கும் என்ன ஸம்பந்தமோ அதுதான் கேட்டகேள்விக்கு பதில்போலும்! போனால் போகிறது! மஞ்சரீ, கல்யாணப்பிள்ளையின் தலைமயிரென்ன தீய்ந்துகிடக்கிறதே?

மஞ்ச:—மஹீஸுதா! இக்காலத்தில் அது ஒருவித அழகென்று சொல்லுவார்கள்.

மஹீ:—நெற்றியில் சனீசுவரன் தொட்டிலாடுகிறானே?

மஞ்ச:—ராஜகுமாரர்களில் இவர் ஸௌந்தர்யவானென்று நிரூபிக்க.

மஹீ:—காதுகளிரண்டும் ஆகாசம் பூமிகளை யெட்டுகின்றனவே!

மஞ்ச:—செங்கோல் செலுத்தவேண்டியதற்காக.

மஹீ:—கண்கள் எங்கே?

மஞ்ச:—அந்தர்த்தியானத்தில் அழுந்திக் கிடக்கின்றன.

மஹீ:—நாஸிகம் நாகரீகமாய் யிருக்கிறது!

மஞ்ச:—முருங்கக் காயைப்போல் முற்றி கனுக்கனுவாயிருக்கிறது!

மஹீ:—மீசையில் புழுக்கள் ஸஞ்சரித்து வாஸஸ்தானமாக்கிக் கொண்டன.

மஞ்ச:—அதனாலென்ன குற்றம்! அது ஒருவித பைசாச ஸௌந்தர்யமெனலாம்.

மஹீ:—ஒஷ்டிராதரங்களுக்கு † என்னேரமும் சண்டைபோலும், கூடாமலிருக்கின்றன.

மஞ்ச:—அவைகளின் மகிமையைச் சொல்லப்புகுந்தால் கஷ்டமாகும்.

மஹீ:—ஸகி! இந்த பற்கள் எத்தனைவித வர்ணங்களோடு ஒன்றோடொன்று பொருந்தாமல் கோபங்கொண்டன. இவைகளை சற்று வர்ணியேன்.

மஞ்ச:—நீலம், பச்சை, கருப்பு, செகப்பு நிறங்களோடு கிரிமி கூடங்களும் சோபிக்கின்றன. குன்றிலுள்ள கற்களைப்போல் ஒன்றோடொன்று சேராமல் பிரிந்திருக்கின்றன.

மஹீ:—தங்காய் என்ன ஆச்சர்யம், மோவாக்கட்டையைத் தேடிப்பார்த்தேன். எங்கே காணவில்லையே!

† ஒஷ்டிரம்-மேலுதடு; அதரம்-கீழுதடு.

மஞ்ச:—தூக்கம் வந்ததால் மேலே ஏறிவிட்டது. அதில்லாவிட்டால் அழகுபோய் விடுமோ.

மஹீ:—குடையிலுள்ள கோலைப் போல் கழுத்து வெகு அழகாயிருக்கிறது!

மஞ்ச:—ஈசுவரனுடைய வரமென்று சொல்லவேண்டும். அழகெல்லாம் ஒன்றோடொன்று சேர்ந்திருக்க எத்தனை புண்ணியம் செய்ய வேண்டும்!

நல்லது அவரைப் பரீக்ஷித்தது போதும்! மிகவும் புத்திசாலியாயிருக்கிறார். யுத்தகாலத்தில் தைரியமாய்ச் சண்டை யிடுவாரா? குதிரை ஏறுவதெப்படி யென்று கேட்டறிந்தாயா? தந்திரயுக்தி, ஸாகஸ, தைர்யங்கள் தெரியுமா? தெரியாவிட்டால் நீ கற்றுக்கொடு. குதிரையின் வால்புறத்தில் இவர் முகமிருக்கும்படியும், ராஜாக்களை போர்முகத்தில் கண்டால் புதரிலொளிந்து கொள்ளும்படியும் தீர்க்காலோசனை செய்து கிணற்றிலிருந்து தவம் செய்யவும் கற்றுக்கொடு. சிறுபிள்ளை! சொல்லிக் கொடுத்தால் எல்லாம் ஸரியாய்விடும். பாதகமில்லை தலைகீழாய் நின்று நமஸ்காரம் செய்யும் வண்ணம் கட்டளையிடு. இன்றையதினம் போகச்சொல்லு.

ரகுபதீ சென்றமாதம் வருகிறாயா வென்றாள். ரகுபதி பற்களை தாராளமாய்க் காட்டி நான் இங்கேயே இருக்கிறேனே, எதைக் கற்றுக் கொடுத்தாலும் தெரிந்துகொள்ளுகிறேன் ஏதாவது வேலையிருந்தால் சொல்லுங்கள் செய்கிறே னென்றான். நல்லது உன் உபாத்தியாயனிக்கு பத்து முறை எழுந்துட்கார்ந்து தண்டனிடென்றாள். ரகுபதி முன்பின் பாராமல் முட்டிமோதி மஞ்சரியின் காலில் விழுந்ததுடன் மஹீஸுதையையும் தண்டனிட்டான். மஹீஸுதை சிரித்து "மஞ்சரீ! இந்த நரனை எதற்கொப்பிடலாம்? வாநரத்துக்கு சுறுசுறுப்புண்டு. இதற்கு ஒன்றுமில்லையே பாவம்! எனக்கு பொழுது போக்குக்காக நீ தயார்செய்து வைத்த ஜீவப்பிராணியை பத்திரமாய்க் காப்பாற்று. அநேக அற்புத வித்தைகளைக் கற்றுக்கொடு. பாதகமில்லை! ஸமயத்தில் அநேக காரியங்களுக்கு உதவும். கொஞ்சம் பழகினல் கெட்டிக்காரனவதில் ஆக்ஷேபமில்லை யென்றாள். ரகுபதிக்குண்டான ஆநந்தத்துக் களவில்லை. மஹீஸுதையின் எதிரில் நிற்க நாம் பாக்கியம் செய்தோமே என்று மகிழ்ந்தான். மஞ்சரி, நீ பரீக்ஷைகொடுத்தது போதும் வா போகலாம்" என, ரகுபதி,, ஊ, ஊ, ஊ, நான் இப்போதே வரவேண்டுமோ! இங்கே இருக்கப்படாதோ? " என்றாள். "என்ன சொன்னுய்? இனிமேல் படிப்பு சொல்லித்தரமாட்டேன். ஓடிப்போ" வென்றாள். "இல்லை, இல்லை மஞ்சரீ இதோ வருகிறேன். ராணீ நான் போகட்டுமா," என்றான். மஹீஸுதை சிரித்து நாளையதினம் காலையில் உனது அங்கவர்ணனை செய்வோம்! பயப்படாமற் செல்லென்றனுப்பினாள்.

## 4-ம் பரிச்சேதம்.

மனோரஞ்சிதமான வாத்யகோஷம். மனோல்லாஸமான கிருதிகளை முகமலர்ச்சியோடு சில மனிதர்கள் பியாண்டு வாத்யத்தில் வாசிக்கிறார்கள். ஒரேவிதமான உடுப்புகளை யணிந்திருக்கின்றனர். என்ன ஆநந்தமயம். பிராதக்கால சூரியன் தன் கிரணங்களை வீசுமுன் அநேக ஸைன்யங்கள் ஒரு மைதானத்தில் வந்திறங்கின. குதிரைவீரர்களும், காலாட்படையும், அனேக வண்டிகளும் கூலியாட்களும், வேட்டைக்குரிய ஸாமான்களும் ஒன்றன் பின்னொன்றாக வந்துகொண்டிருந்தன. மைதானத்தில் சில நிமிஷத்துக்குள் அநேக கூடாரங்களேற்பட்டன. மனிதர்கள் தங்கவும், குதிரைகள் கட்டவும், பாகசாலைகளுக்காகவும் அநேக விடுதிகளை யமைத்தனர். தடால், டம், ஜை, பிப்பீ என்ற நாதத்துடன் அனேக வாத்யங்கள் முழங்கின. சிலர் கும்பலாய் ஓரிடத்திலுட்கார்ந்து மூக்குப்பொடி தேய்த்தும், நாசிகத்தில் நுழைப்பதும், பிறருக்குக் கொடுப்

பதுமா யிருந்தார்கள். இன்னும் சிலர் கட்டை முட்டைகளைப் பொறுக்கியும், பிறர் வைத்திருந்ததைத் திருடியும் வாயால் ஸத்யவசனங்களைக் கூறியும்; காரியத்தில் கவனமாயிருந்தனர். குதிரைகளின் எஜமானர்கள் அவைகளின் தேகவலியைப் போக்க வேண்டி தேய்த்துக்கொண்டே அவைகளின் குணஸ்வபாவத்தை வர்ணித்தும் தூஷித்தும் வந்தார்கள். உடுப்பைக் களைந்தெறிந்தவர் சிலர். அப்பாடா! என்று படுத்தவர்கள் சிலர். எட்டுநாட்களாய் அன்னஹார நித்திரைகளில்லாமல் அலைந்ததைப் பற்றி விஸ்தாரமாய்ப் பேசினவர்களனேகர். கையிலிருந்த சிற்றுண்டியை சட்டென்று வாயில்போட்டு மெல்பவர்கள் சிலர். குளத்தைச்சுற்றி ஸைனிகர்கள் நிறைந்திருந்தனர். முகம், கை, கால்களை சுத்திசெய்து பற்குச்சியை வாயில் மென்று தின்றவர்களை வர்ணிக்க ஸாத்யமில்லாமற் போயிற்று. ஒருமணி நேரத்துக்குள் மைதானத்தில் செத்தை குப்பைகளில்லாமல் ரம்ணீயமான ராஜபுரியைப் போல் சீர்திருத்தினார்கள். வீர ரஸம் ஒவ்வொரு ஸைனிகன் முகத்திலும் ஜ்வலித்தது, அநேகர் பாடலாயினர். பச்சென்ற புல்லைக் கண்டதும் குதிரைகள் ஸ்வேச்சா விஹாரிகளாய் மேய்ந்தன. அவைகளின் பாலகர் அன்றையதினம் ஸ்வேச்சையாய்ச் செல்லட்டுமென்று விட்டார்கள்.

மைதானத்தின் மத்தியில் புவனேசுவரியைப் போல் ஒரு கட்டடம் அமைக்கப் பட்டது. அதன் ஸௌந்தர்யத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது. விவிதஜரிகை வேலைகள் உட்புறத்தில் செய்திருந்தன; மத்தியில் நவரத்ந கசிதமான ஸிம்ஹாஸனமும் அதன் இருபுறத்திலும் கௌரவார்ஹமான அநேக நாற்காலிகளும், நடுவில் மிருதுவான பட்டு வஸ்திரமும் போடப் பட்டிருந்தன. புவனேசுவரிக்குள் அநேக மஹல்களுண்டு; சயனமஹல், ஹம்ஸதூளிகாதல்பத்துடனும் நாநாவித அழகிய படங்களோடு சோபித்தது. ஏகாந்த கிருகத்தில் அநேக புஸ்தகங்களும், ஆச்சர்ய ஸாமான்களு மிருந்தன, உத்ஸாகத்துடன் விளையாட ஒரு மஹலுண்டு இவைகளைப் பார்த்தால் யாரோ ஒரு மகாராஜாவின் ஆகமனத்துக்காகச் செய்தவைகளென்று நன்றாயறியலாம். ஸைனிகர்களின் ஜயத்துவனியால் மகாராஜா வருகிறாரென்று தெரிந்தது. பதினாறு குதிரைகள் கட்டிய திவ்யரதத்தில் தேஜோமயனான ஒரு யுவாபுருஷன் மந்தஹாஸ முகத்துடன் அருகிலுள்ள தன் ஆப்தனோடு ஸம்பாஷித்துக்கொண்டிருந்தான். ஸைன்யங்களைக் காட்டிக்காட்டி நேசனோடு பேசினான். ஸ்நேகிதனும் ஸந்தோஷத்தோடு மகாராஜாவுக்குப் பதிலுரைப்பதுடன் வீரர்களுக்கெல்லாம் தலையையாட்டி தன் வந்தனத்தைச் செலுத்தினான். புவனேசுவரிக் கருகில் வந்ததும், தாஸபரிசாரகர்களோடிவந்து அரசனுக்கு திருஷ்டி சுற்றி ஆரத்தியெடுத்து ஜயவிஜயீபவ! என்று கூறி உள்ளே அழைத்துச் சென்றார்கள். மகாராஜன் விச்ராந்திபவனத்தைத்தேடி நடந்தான். அவன் ஸகன் தர்பார் ஹாலில் உட்கார்ந்து ஸைனிகர்களின் யோகக்ஷேமலாபங்களை விசாரித்தும், வேண்டிய பொருள்களை ஆட்கள் மூலமாய்க் கொடுக்கும்படியும் கட்டளையிட்டான். ராஜபோஜனம் தயாரா யிருக்கிறதென்று சிலர் தெரிவித்தார்கள். ஸ்நேகிதன் மாகாராஜாவினிருப்பிடம் தேடிச் சென்று போஜனம் செய்ய அழைத்தான். மகாராஜா ஸ்நானம் செய்ய வேண்டாமா வென, நேசன் அரசே பாகசாலிகள் வென்னீர் போட்டிருக்கிறார்கள் வாருங்களென்றான். மகாராஜா "பிரதீபா, அருகே ஆறு ஒடுகிறது, நீயும் நானும் வேடிக்கையாய்ச் சென்று நீராடி நீந்தலா" மென்றான். பிரதீபன் வெயிலாயிற்று சரீரத்துக்கு கஷ்டமாகும் வேண்டாமென்றும் அரசன் கேளாததால் இருவரும் ஆற்றைத் தேடி வழிநடந்தனர். நதிக்கரைக்கும் மைதானத்துக்கும் ஸமீபமாயிருந்தாலும் ஸைனிகர்கள் அருகிலிருப்பதால் இவர்கள் சிறி தூரம் சென்று நீராட எண்ணினார்கள். ஒருமைல்.

தூரத்தில் அழகிய படித்துறையும், உத்தமமான மண்டபங்களு மிருந்தன. மஹீந்திரா, இந்த இடம் உனக்கேற்றது: ஸ்நானம் செய்யலாம் வாவென்று பிரதீபனழைத்தான். அரசன், ஸ்நான கட்டடத்தைக் கண்டதும் ஸந்தோஷத்துடன் நதியிலிறங்கினன். ஆப்தமித்திரர்களின் ஆநந்தம் அதிசயிக்கத் தக்கது. வெகு நேரம் வரை ஜலத்தில் நீந்தியும், குதித்து தண்ணீரை ஒருவர்மேலொருவர் வாரியிறைத்தும் விளையாடினர்கள். பிரதீபன், மகாராஜா நேரமாயிற்று, உபவாஸமாயிருக்கிறீர்கள், விளையாடினது போது மென்ருன். மஹீந்திரன், "நேசா, இந்த நதியை விட்டுப் பிரிய எனக்கு மனம் வரவில்லை. இதில் நீராட நான் என்ன பாக்யம் செய்திருந்தேன்! இதின் பெயர் ஹேமாவதி என்கிருர்கள். அதோ தேவாலயம் தெரிகிறது: அங்கு சென்று பகவானை ஸ்தோத்திரம் செய்து நம்மிடம் செல்லலாம்" என்ருன். பிரதீபன் அவ்விதமே யாகட்டு மென்று கரை ஏறினன். ராஜகுமாரனும் நதியிலிருந்து மேலே வந்தான். இருவரும் பட்டு வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டு நீலகண்டேசுவரரின் ஆலயத்தை நோக்கி நடந்தனர். போகும்வழியில் சேகரபுரியிலுள்ள வீடு, மாடம், பங்களாக்களைப் பார்த்து ஆநந்தங்கொண்டார்கள். வித்யாதரிவிலாஸ் என்று எழுதியிருக்கும் இந்திர விமானக்கட்டடத்தைக் கண்டதிசயித்து அதிலுள்ள செடி, கொடி, மரங்களின் வளர்ச்சியைக் கண்டு மனமகிழ்ந்தனர். சேகரபுரவாஸிகள் இவர்களைக் கண்டு ஆச்சர்யப்பட்டார்கள். கோயில் விசாலமாயிருந்தது. ஒன்பதுசுற்றுக் கோட்டை யொன்று கோவிலின் பின்புறத்திலிருந்தது. வித்யாதரி விலாசம் வெளிப் பார்வைக்கு சீக்கிரம் உள்ளே செல்லும்படி தோற்றும். அதன் மதில் சுவர் கோவிலுக்கும், கட்டடத்துக்கும் சுற்றிச் சுற்றி எடுக்கப் பட்டிருந்தது. அதன் ரஹஸ்யத்தை அன்யர்களறிவது கஷ்டம். பரதேசவாஸிகளான மஹீந்திரனும், பிரதீபனும், கோவிலில் நுழைந்து ஸ்வாமிதரிசனம்செய்துபிரதக்ஷணம்வருகையில் மேற்படி கோட்டைக்குச் செல்லும் வழி தெரிந்ததால் அதில் நுழைந்தார்கள். அன்யர்கள் அவ்வழி செல்லக்கூடாது. அந்த வழியும் சில நேரத்தில் மட்டும் திறந்திருக்கும். அன்று வெள்ளிக்கிழமையானதால் கோட்டையில் வஸிக்கும் ராஜரமணிகள் அம்பிகையை தரிசிப்பதற்காக வழியை மூடாமலிருந்தனர். ராஜகுமாரர்களிருவரும் அக்கோட்டையில் நுழைந்தவுடன் ஒரு முறை சுவரைச் சுற்றி வந்தனர், அந்த வழி ஆரம்பத்தில் சிறியதாயிருந்தது. முதல் வந்த இடத்துக்கே மறுபடி வந்தோமென்று அவர்கள் நினைப்பதற்குள் குறுக்கே பிரம்மாண்டமான கல் சுவர் தடுத்தது. இடதுபுறத்தில் ஒரு சிறு வழியிருக்கக் கண்டு அவ்வழி நடந்தார்கள். வெகு தூரம் சுற்றிக் கடைசியில் ஆரம்பத்தில் வந்த வழியிதென்று நினைப்பதற்குள் இன்னொரு சுவர் எதிர்த்தது. இதென்ன அதிசயமென்று அவர்கள் யோசிக்கையில் மறுபடி வலது புறத்தில் சிறிய பாதை யொன்றிருந்ததால் அதில் நடந்தனர். இவ்விதமே ஆரம்பம் முதல் ஒன்பது கோட்டைச் சுவர்களையும் சுற்றி வழி தெரியாமல் தவித்தார்கள். வயிற்றுப்பசி ஸஹிக்க முடிய வில்லை. மஹீந்திரன் சோர்ந்ததை பிரதீபன் பார்த்து மகாராஜா நதி ஸ்நானம் வேண்டா மென்றேன். என் மனதில் அப்போதே ஒரு பயமுதித்தது: காரணம் தெரியவில்லை. வெளியே செல்ல பாதையைக்காணேம்! யாரையாவது கேட்போ மென்ருல் மனிதர்களுமில்லை. இதோ தெரிகிற ஸௌந்தர்ய கட்டடம் நம்மை இக்கதிக்குக் கொண்டு வந்தது. நடந்து நடந்து காலோய்ந்துபோய்விட்டது. தங்களை வெளியில் அழைத்துச் செல்லும் உபாயத்தை நான் கண்டுபிடிக்கும் வரை நீங்கள் எங்கும் செல்லாமல் இங்கேயிருக்கவேண்டுகிறேன். அரண் மனையைப்போல் தோற்றும் இக்கட்டடத்தில் யாராவது மனிதர்களிருப்பார்கள். நான் சென்று விசாரித்து வருகிறேன். உத்தரவு கொடுமென்ருன். மஹீந்திரன் சிரித்து ஆண்பிள்ளைகளென்று பெயரெடுத்தது பொய்யாய் வீண் பிள்ளைகளானேம். முன் பின் தெரியாத

வீட்டில் நீ நுழைந்தால் ஏதாவது கெடுதி விளையும். நானும் வருகிறேன்: இருந்தாலும், இறந்தாலும் கூடவே சென்று காரியங்களைச் செய்வது நலம் என்றான். பிரதீபன் வேண்டாமென்றும் கேட்கவில்லை. இருவரும் ஒன்பதாவது வளவின் மத்தியிலுள்ள அரண்மனைக்குச் சென்றனர். அவ்விடத்தில் காவலாளிகளில்லை. யாரையும் காணுததால் பிரதிபன் "அரண்மனைக்குள்ளிருப்பவர்கள் வழிதப்பி வந்தவர்களிடம் பக்ஷம்வைத்து வழிகாட்டுவார்களாக" வென்று சப்தமிட்டான். உள்ளேயிருந்து யாரும் பதில் கொடுக்கவில்லை. மறுபடி அவ்விதமே பிரதீபன் கூச்சலிட சில நேரத்துக்குள் "யாரங்கே" என்று ஒரு ஸ்திரீ கேட்பதுபோல்குரலுண்டாயிற்று. அம்மணீ நாங்கள் கோவிலிலிருந்து வழிதப்பிவந்தோம்! வெளியே செல்ல மார்க்கம் காட்டக்கோருகிறோம்" என்று பிரதீபன் கூறினான். ஸர்வாலங்கார ஸுந்தரியான யௌவன ஸ்திரீ அவ்விடம் வந்தாள். இரண்டு வாலிபர்களையும் மனதில் குறித்துக் கொண்டு வாய்திறவாமல் உள்ளே சென்றாள். மஹீந்திரன் அவள் முகத்தில் தோன்றிய சில குறிகளைப் பார்த்து "பிரதீபா! இவள் பதில் பேசாமல் போய்விட்டாள், என்ன செய்வாளோ தெரியவில்லை. உனக்கென்ன தோன்றுகிறது?" என்றான். 'நிரபாரதிகளான நம்மை யார் என்ன செய்யக்கூடும்? பொறுமையோடு சற்று நேரமிருந்து பார்ப்போம்! அதற்குள் நடக்கும் ஸங்கதியை கவனிக்கலா" மென்று பிரதீபன் மறுமொழி புரைத்தான்.

முன் வந்த ரமணி அவர்களிடம் வந்து நீங்கள் கன்யாமந்திரம் வந்து விட்டீர்கள்? எங்களரசர்கண்டால் சிரச்சேதம் செய்வார். உங்களைப் பார்த்தால் நிஷ்களங்கமுள்ளவர்களென்று தோன்றுகிறது. மார்க்காயாஸத்தால் வருந்தியிருப்பதால் என் எஜமானியின் கட்டளைப்படி அதிதிஸத்காரம் செய்வதை ஏற்றுக் கொள்ளுங்கள், பிறகு வழி காட்டுகிறேனென்றாள்.

மஹீந்திரன் பிரதீபனைப் பார்த்தான். அவன் "மகராஜா! ஒருவர் சொல்லைத் தடுக்கலாகாது. நமக்கும் பசியாயிருக்கிறது! அவர்களும் அதிதிபூஜைக்கு ஆசைப்படுகின்றனர். ஈசுவரன் உங்களுடைய சுத்தஹிருதயத்துக்கு ஒரு கெடுதியும்செய்ய மாட்டார். எல்லாம் மங்களமாகவே முடியும்! வாரும் இவ்வம்மணியிடம் அமுதை சாப்பிடலாம்" என்றான். வந்தவள் அவர்களை வெகு உபசாரத்துடன் உள்ளே அழைத்துச் சென்றாள். அரண்மனையின் மத்தியில் ஸௌந்தர்யசாலியான ஒரு ஸ்திரீயின் தைல சித்திர படம் கட்டியிருந்தது. அவளுடைய அவயவ லக்ஷணங்கள் பார்ப்பவர்களின் கண், மனங்களைக் கவர்ந்தன. சாய்ந்த பார்வையோடு நிற்கிறாள். படத்தின் அடியில் சில ஸம்ஸ்கிருத எழுத்துக்களிருந்தன. அவைகளை மஹீந்திரன் படித்தான். மஹீ ஸுதா என்றறிந்து கொண்டான்.

---

## A CATECHISM OF THE BHAGAVAD-GITA.

FOR THE USE OF CHILDREN.

ஸ்ரீ கிருஷ்ணுய நம:

## பகவத்கீதை வினுவிடை.

(சிறுவர்களுக்குபயோகமாக எழுதப்பட்டது.)

1 சென்ற அத்யாயத்தில் கர்மசந்யாசம் ஆகிய ஞானமார்க்கமும், அதற்குமுன் கர்மாநுஷ்டானமாகிய யோகமார்க்கமும் சிறப்பிக்கப் பட்டன. இவ்விருவகை மார்க்கங்களுள் எது சிறந்தது?

இரண்டுக்கும் ஞான சித்தியாகிய பிரயோசனம் ஒன்றே. ஆயினும் ஞானத்தை இன்னமும் பெருமல் இனிமேல் பெற விரும்பும் ஒருவனுக்கு, கர்மம் முதற்படி யாதலின், அக்கர்மமே சிறந்ததாகும். அன்றியும், கர்மபந்தத்துக்கும், அப்பந்தம் நீங்குதற்கும், கர்மம் செய்தலும் செய்யாமையுமே அன்று

காரணம். பலாபேக்ஷையில்லாமல் கர்மத்தைச் செய்தாலும் கூட ஒருவன் கர்மசந்யாசிக்குச் சமானமே யாவன். அவனுக்குக் கர்மபந்த முண்டாகாது. மேலும், ஞானத்தோடு கூடிய கர்ம சந்யாசமாகிய சாங்கியமும், சமத்வ புத்தி யோடு கூடிய கர்மாநுஷ்டானமாகிய யோக மும் ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வுள்ளவை யென்று கூறுதல் அவிவேகம். விவேகிகள் இரண்டுக்கும் வேற்றுமை சொல்ல மாட்டார் கள். இரண்டுக்கும் பிரயோசனம் முடிவில் ஒன்றேயாகும். இன்னமும், சந்யாசத்துக்கு யோகமானது இன்றியமையாத கருவியாகை யினாலே, அந்த யோகத்தை விட்டுவிட்டுச் சந்யாசத்தையாவது அதன் பயனாகிய ஞான த்தையாவது அடைவது அசாத்தியம். சந்யாச மாவது அகப்பற்றுப் புறப்பற்று ஆகிய இரு வகைப் பற்றையும் அறுத்தலன்றோ? காமாதி விகாரங்களால் சித்தம் மலின மடைந்திருப் பவர்களுக்கு அந்தத்துறவு எப்படி உண்டா கும்? ஆகையினாலே ஈசுவரார்ப்பணமாகப்பலா பேக்ஷையை விட்டுக் கர்மங்களைச் செய்து சித்த சுத்தியடைந்தவர்களுக்கே துறவுண்டா கும்.

2. பலாபேக்ஷையில்லாமல் ஒருவன் கர்மங் களைச் செய்யின் அதனால் பந்தம் அடைய மாட்டா னென்பதற்கு என்ன திருஷ்டாந் தம்?

பஞ்சேந்திரியங்களையும் நிக்ரகித்துப், பரி சுத்தமான மனத்தோடு பலாபேக்ஷையில்லா மல், எஜமானனுக்காக வேலைக்காரன் தான் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்தல் போல, ஈசுவரப் பிரீதிக்காகக் கர்மங்களைச் செய் கின்றவன், ஜலத்துக்குள் மூழ்கிக் கிடக்கும் தாமரையிலையானது எப்படி அந்த ஜலத்தால் சிறிதும் ஒட்டப்படுவ தில்லையோ, அப்படியே, தானும் அக்கர்மங்களால் ஒருவிதமான பந்த மும் அடையமாட்டான். அக்கர்மங்களால் ஈசவரப் பிரீதியைப் பெற்று, அதனாலே சித்த சுத்தியை அடைவான். பின்பு கிரமத்தாலே அவன் ஞானத்தைப் பெற்று மோக்ஷத்தையும் அடைவான்.

3. ஆத்மாவுக்கு அதன் பிரகாசத்தை மறை த்து நிற்பதாகிய மலினம் யாது?

தானல்லாத தேகேந்திரியங்களைத் தானென் றும், தனதல்லாத மனைவி மக்கள் பொருள் முதலியவற்றைத் தனதென்றும் எண்ணச் செய்யும் பொய்யறிவாகிய மோகமும், அதன் காரியமாகிய காமக்குரோதங்களுமே அந்தப் ப்ரகாசத்தை மறைப்பனவாகும். புகையால் நெருப்பும் புழுதியால் கண்ணாடியும், கருப்பை யாலே சிசுவம்,தத்தம் ஒளியும் அழகும் தோன் றாமல் மறைபடுவதுபோலக் காமத்தாலே ஞானப் பிரகாசம் மறைபட்டுப் போகின்றது. இந்த அஞ்ஞானத்தாலே தானாகிய பிரம்மத்தை அறியாமல் இருவினைகளைத்தேடி மனிதர்கள் உழல்கின்றார்கள். ஆத்மஞானம் முதிர்ந்து அதனை மூடியிருக்கும் அஞ்ஞானத்தை அழி த்த காலத்தில், தானாகிய பரம்பொருளை அறி வார்கள். அவ்வாறு அறிந்து அதில் நிஷ்டை கூடினவர்களுக்கு இத்தேகம் போனபின் மீண் டும் பிறப்பில்லை.

4. இவ்விதமான நிஷ்டையைக் கூடிய ஞானி யின் இலக்கணமென்ன ?

இந்த ஞானியானவன் தானொரு கர்மமும் செய்யான். பிறரைக் கொண்டும் செய்விக்க மாட்டான். எப்போதும், இந்திரியநிக்ரகமும் மனோநிக்ரகமும் உடையவனா யிருப்பான். அவன் எல்லாரையும் ஒரே தன்மையாகப் பாவிப்பான். பிராமணனிடத்திலும் புலை யனிடத்திலும், பசுவினிடத்திலும், நாயினிடத் திலும், எவ்வகைப்பட்ட பிராணிகளிடத்தும், பிரஹ்மம் ஒரே நிலையாக நிற்குமென்னும் உண்மையை நிச்சந்தேகமாக அறிந்திருப்பான். அவனுக்கு இன்பம் வந்த காலத்தில் சந்தோஷ மும், துன்பம் வந்தகாலத்தில் விசனமும் இரண்டு மில்லை.

அவனுக்கு வெளிப் பொருள்களாலே சந்தோஷமாவது வியசனமாவது உண்டாவதில்லை. சதா ஆத்மதரிசனத்தாலே பேரானந்தத்தைப் பெற்றிருப்பான். இவ்வாறு தானே சத்யமென்றும், தன்னில் வேறான பிரபஞ்சமெல்லாம் அசத்தியம் என்றும் அஸ்திரம் (ஸ்திரமற்றது) என்றும் கண்ட இந்த ஞானி தனக்குள் தானே சுகமும், விநோதமும், ஒளியும், பெற்றுத், தான் வேறு பிரமம் வேறு என்னும் உணர்வு நீங்கித், தானே பிரமமாய் அழியா ஆனந்தத்தை அடைவான். இந்த ஞானிக்குத் தேகத்தை விட்டு நீங்கின பின்னன்றி தேகத்தில் இருக்கும் போதே முக்தியும் ஆனந்தமும் உண்டாகும்.

எஸ். முத்துஜயர், பி. ஏ.

---

## DELHI
### THE ANCIENT IMPERIAL CITY.

## டெல்லிமாநகரம்.

(250-வது பக்கத்தொடர்ச்சி.)

---

7. இதற்குச் சற்று தூரத்தில் கலாமஸ்ஜீத் என்றவேறொரு கோரியுமிருக்கிறது. இது கருப்பு சாயமிட்ட பெரிய கட்டடம். இதை அப்கானிய அரசர்கள்கட்டியதாகச் சொல்லுகிறார்கள். இதைத் தவிர காஸ்மீர கேட்டுக்கு சமீபத்தில் கர்னல் ஸ்கின்னர் என்ற ஐரோபியர் முயற்சியால் ஒரு லக்ஷம் ரூபாய் செலவில் ஒரு கிறிஸ்து கோவில் கட்டப்பட்டிருக்கிறது. இது நூதன நாகரிகமாய்க் கட்டப்பட்டது. அன்றியும் கல்கத்தா கேட்டுக்கு சமீபத்திலுள்ள பூர்வீகமான கட்டடமாகிய மருந்துக்கிடங்கு பார்க்கதக்கது. ரயில் ஸ்டேஷனுக்கு சமீபத்திலேயே உள்ள மகாராணி தோட்டமானது பல வித செடி கொடிகள் வைத்து வளர்க்கப்பட்டு அதிக சீரில் வைக்கப்பட்டிருக்கிறது.

8. இந்தப் பட்டணத்திலுள்ள பல விநோத கட்டடங்களையும் தோட்டங்களையும் பார்க்க வேண்டுமென்றால் ஒரு மாத காலமாவது இவ்விடத்தில் தங்க வேண்டும். பட்டணத்தின் கீழ்பாகமாகிய யமுனை நதி செல்லும் பாகத்தை விட்டு மற்ற மூன்று புறத்திலும்பட்டணத்தின் அழிவுகளை பத்து மைல் தூரம் வரையில் காணலாம். வட புறத்தில் இராஜப்பூர் அழிவுகள், பழய கவரன்மெண்டு தோட்டம், பழயகோரிகள், குதிரைப்பந்தயபூமி முதலியவைகளும், மேற்கு பாகத்தில் சாதர்பஜார், கிஷீங்கன்ஜ், சித்திப்பூர், பழயகோட்டை, சப்ஜிமாண்டி, சாலிக்ராம் தோட்டம், அசோகன் ஸ்தம்பம், 57ம் வருஷத்திய ஞாபக ஸ்தம்பம், மலாஹாகன்ஜ்முதலியவைகளும், தெற்கில் பஹார்கன்ஜ், ஜயசிங்பூர், அக்பர்தோட்டம், மாதவராஜ் தோட்டம், ஜெயப்பூர் ராஜா நக்ஷத்திரசாலை, பிரோஜஷாபாத் பழய அரண்மனை, இந்திரபேட் பழய வீடுகள் முதலிய பல அழிவுகளை நீள நெடுக எழுதிக்கொண்டு போகலாம். ஆனால் அவைகளிலுள்ள விநோத விசித்திரங்களை எழுதுவதென்றால் சாத்தியமில்லை.

9. முன்சொன்ன கோட்டைக்கு சமீபத்தில் நல்ல நிலைமையிலிருக்கிற நூதனமான கிருஷ்ணன் கோவிலும், அதற்கு சமீபத்தில் ஜயினருடைய ஒரு ஆலயமும் காணப்படுகிறதே யன்றி இந்துக்களுடைய ஆயிரக்கணக்கான கோவில்களின் சிதைவுகளும், மதில்களும் கோபுரங்களும் இருந்தவிடம் தெரியாமல் அழிக்கப்பட்டுப் போயின வென்றாலும் அவைகளின் ரூபங்கள் பலவிடங்களில் தேஜோமயமாய்ப் பிரகாசித்துக் கொண்டே இருக்கின்றன. இவைகள் காணப்படும் கோரமான ஸ்திதியைக் காணும் எவனும் வியப்பையும், பிரமிப்பையு மடையாமலிரானென்பது திண்ணம்.

10. இப்பட்டணத்திற்கு தென்மேற்கில் செல்லுகிற பாதையில் சுமார் பத்துமைல் சென்றால் குடப்மைனார் என்ற 256 அடி உயரமுள்ள கோபுரத்தைக் காணலாம். இனி சுமார் 36 அடி சுற்றளவுள்ள பலமான கருங்கல் அஸ்திவாரத்தின் பேரில் ஐந்து அடுக்குள்ளதாயும், உள்பாகத்தில் 375-விளைவுப்படி

கள் வைத்து மேலே ஏறிச்சென்று சுமார் எட்டுமைல் தூரத்திலுள்ள யமுனையையும் மற்ற காக்ஷிகளையும் பார்க்கத்தகுந்த விதமாய் கட்டப்பட்டவிளக்குக்கூடு (Light house) போன்ற கட்டடம். கட்டடத்தின்உள்பாகத்தில்காற்றும் வெளிச்சமும் வரும்படி அங்கங்கே திறப்புகள் வைக்கப்பட்டிருப்பதுடன் ஒவ்வொரு அடுக்கின் அந்தியத்திலும் வெளிப்பட்டு கைப்பிடியாகவைக்கப்பட்டிருக்கும் சுற்றுக்கம்பிகளைப் பிடித்துக் கொண்டு தாழ்வாரத்தில் உலாவுவது போல கோபுரவட்டத்தைச் சுற்றிவரத்தகுந்த விதமாயும் மேல்சிகரத்திலுள்ள இடம் 30சதுர அடிகள் விஸ்தீரணமுள்ளதாயும் ஸம்வத் 1903 ம்வருஷத்தில் பிருதிவி இராஜர் என்றஅரசரால் கட்டப்பட்ட கோபுரம் உலகத்திலுள்ள கோபுரங்களிலெல்லாம் உயர்ந்ததென்று கூறப்படுகிறது. இதன் பூர்வோத்திரத்தை சிலர் குத்புதீன் என்ற ஞானியும் சிற்ப சாஸ்திரியுமான தன் நண்பன் ஞாபகார்த்தமாய் அல்டாமூஷ் என்ற மகமதிய அரசன் கட்டியதாகவும், கோரி வம்சத்திற்குப் பிறகு அரசாக்ஷியைப் பெற்ற குடப் என்ற வம்சத்து அரசர்கள் கட்டியதென்று சிலரும், மற்றும் சிலர் வேறு விதமாகவும் கூறுகிறார்கள். இதன் பேரில் அரபி பாஷை எழுத்துக்களை எழுதியிருக்கிறதென்றும் அவ்விடத்தில் பார்க்க வருகிறவர்களை யுபசரித்து அழைத்துக் கொண்டுபோய் பலவற்றையும் காட்டிக் காசு பறிக்கிறவேலையிலேயே யிருக்கிற மகமதியர்கள் இந்த கோபுரத்தண்டை வருகிறதில்லை. இதை இவர்கள் இந்துக்கள் கோவில் என்று கூறுகிறார்கள். இதனாலேயே இது மகமதியனால் கட்டபட்டதல்ல வென்று தெரிகிறது. தவிர இவ்விடத்தில் ஒரு பண்டா பிராமணனு மிருக்கிறான். இவனும் இதைப்பற்றிய சரித்திரத்தை யொருவாறு கூறுகிறான்.

11. பிருதிவிராஜா டில்லிப் பட்டணத்தை யாண்டுக் கொண்டிருக்கையில் கன்யாகுப்ஜத்து அரசனது ஏக புத்திரியும் அதிக ரூபலாவண்ணியமும் அதற்குத்தகுந்த தெய்வபக்தியும் குடிகொண்ட சஞ்ஜோக்தை யல்லது குணவதி என்று அழைக்கப்படுகிற பெண்ணை பல அரசர்கள் தங்களுக்கு மணஞ்செய்து கொடுக்கக் கேட்டும் அவள் தனக்குப் பிரத்தியக்ஷமாகும்படி தரிசனம்கொடுத்துவருகிற யமுனாதேவியின்உத்தரவின்றிவிவாகம்செய்துக்கொள்ள மறுத்ததன்றி, டில்லிப்பட்டணத்தின் தென் கோடியில் தகுந்த காவலும் கட்டுமமைத்து ஒருஉத்தியானவனமும் அதன்மத்தியில் யமுனா நதியை அவ்விடத்திலிருந்தபடியே கண்டு தரிசிக்கும்படியான உயரமுள்ள ஒரு கன்னிகா மாடமும் கட்டிக்கொடுக்கும்படி தன் தகப்பனை மன்றாடிக் கேட்டதாகவும், அதற்கிசைந்து அவள் தகப்பன் இந்த கோபுரத்தை முதலில் ஒரு அடுக்குக்கட்டி மேலே ஏறிப் பார்க்க யமுனைதெரியாமல்போகவே, மறுபடி இரண்டாம் அடுக்குக் கட்டியதாகவும், யமுனைதோற்றமற்போகவே மூன்றும் அடுக்கைக் கட்டியதாகவும், இப்படியே மற்றஇரண்டடுக்குகளையும் கட்டியதாகவும், குணவதி தினப்படி இரண்டு தடவை இந்த கோபுரத்தின் மேல் ஏறி யமுனா பூஜைசெய்து வந்ததாகவும் கடைசியில் தனது அன்புக்குரிய கணவனை யடைந்து தேவியின்வரப்பிரசாதப்படி அத்தேவியின் ஸ்வரூபத்தில் கலந்ததாகவும், பிறகுவந்த மகமதிய அரசர்கள் அக்கோபுரத்தின் அழகைக்கண்டு மேல் பூச்சுக்களைச் சுரண்டிவிட்டு பல அரபி எழுத்துக்களைப் பதித்ததாகவும், அந்தவிடத்திலேயே தாங்களும் வசிக்கத்தொடங்கவே பல கஷ்டங்களும் நஷ்டங்களும்நேர, மகமதியர்கள் இது இந்துக்களுடைய தேவதையின் செய்கையெனக்கொண்டு அதற்குப் பக்கத்திலிருந்த பல ஆலயங்களையும் அரண்மனைகளையும் இடித்து நாசஞ்செய்து, பல அக்கிரமச்செய்கைகள்செய்யவே பலர் வாயாலும் மூக்காலும் இரத்தத்தைக்கக்கிக்கொண்டு இறக்கவும், நல்ல எண்ணம் தோன்றாமல் இறந்தவர்களை அங்கங்கேயே புதைத்து சமாதிகள்கட்டி தாங்களும் அவ்விடத்திலேயே சமாதியானார்கள். குணவதி

கோபுரம் என்பது குடப்மைஞர் என்று பெயர் வழங்கிவருகிறது. இதற்கு பக்கத்தில் இப்பொழுதும் ஜயமகாதேவி என்ற ஒரு திவ்விய ஆலயமும், ஒரு சிவாலயமுமிருக்கிறது. பூஜை முதலியவைகள் நடந்தேறிவருகின்றன. தவிர இந்த கோபுரத்திற்கு சமீபத்தில் அல்டாமுட் சமாதி, குட்புடீன் சமாதி, அநேக கட்டடங்களின் வாயில், தூண், கமான் வளைவு, ஷாஹாலம் சமாதி, 60 அடி உயரமுள்ள ஜயஸ்தம்பம், முதலிய பல சிதைவுகள் காணப்படுகின்றன. இவ்விடத்தில் ஒரு வைத்திய சாலையும் ஒரு போலீஸ் ஸ்டேஷனும் வைக்கப்படிருப்பதுடன் ஐரோப்பியர் தங்குவதற்கு தகுந்த ஒரு பங்களாவு மிருக்கிறது. இவ்விடத்தில் குடிப்பதற்குக்கூட சுத்த ஜலம் கிடைப்பது கஷ்டமென்றால் மற்ற சங்கதிகளைப்பற்றிக் கூறுவானேன். இதைப்பார்த்துக்கொண்டு உடனே திரும்புவதேநலமென்று தோன்றும். இந்த கோபுரத்தின் பேரில் ஏறிப்பார்கிறவர்கள் பூர்வ இந்திரப்பிரஸ்தம் என்ற பட்டணத்தின் விஸ்தீர்ணத்தை ஒருவாறு மதிக்கதிறமையுள்ளவர்களாவதுடன் அவ்விஸ்தீரணத்திலழிந்து கிடக்கிற சிதைவுகளைக்கண்டு கண்களில் தண்ணீர் விடாமலுமிரார். இதற்கு பக்கத்திலுள்ள பல திவ்வியமான கட்டடங்களிலெல்லாம் சமாதி வைக்கப்பட்டிருக்கிறது.

12. டில்லிபட்டணத்திற்கு தெற்கே கொஞ்சதூரத்தில் கோடீலா என்பதாக ஒரு புராதன கோட்டையிருக்கிறது. இது பிரோஜ்ஷா சக்கரவர்த்தியால் கட்டிவைக்கப்பட்டதென்று கூறினார்கள். இது நாளதுவரையில் பலமான கட்டடமாகவே யிருப்பதன்றியில் மத்தியில் பல சிறியதும் சிலபெரியதுமான கட்டடங்களையுடையதாயும் லாத்து என்று அழைக்கப்படுகிற பிரோஜ்ஷாவின் ஜயஸ்தம்பம் நாட்டப்பட்டதாயுமிருக்கிறது. இதன் உயரம் சுமார் 40 அடியிருக்கலாம். இதை அசோகமஹாராஜன் கட்டியதாக சிலர் கூறுகின்றார்கள். இதற்கு சுமார் இரண்டுமைல் தூரத்தில் உமாயூன் சமாதி என்ற பெரிய கட்டடம் காணப்படுகிறது. இது சுமார் 240 அடி சுற்றளவுள்ளதாய் செங்கிறக்கற்களால் கட்டப்பட்ட மேடையின்பேரில் வெகுஅழகாயும், அலங்காரமாயும் கட்டப்பட்ட நேர்த்தியான கட்டடம். இதன் சுற்றுப் புறங்களிலுள்ள அறைகளில் பலருடைய சமாதிகள் வைக்கப்பட்டிருக்கிறது. மத்தியில் வெள்ளைக்கற்களால் பாவப்பட்டு, வெள்ளைக்கற்களாலேயே சமாதிமேடைசெய்யப்பட்டு வெகு அந்தமாக விளங்கும் அறை உமாயூன் சமாதி செய்யப்பட்டவிடம். இக்கட்டடத்தின் மேல்பாகத்தில் அறுகோண உருவமாய் கற்களால் செய்யப்பட்ட பன்னிரண்டு சிகரங்களுக்கு நடுவில் பிரமாண்டமான வளவுகோபுரம் மத்தியில் வெகு இலக்ஷணமாகக் கட்டப்பட்டிருக்கிறது. இதற்கு எட்டு இலக்ஷம் ரூபாய் செலவிடப்பட்டதாகத் தெரியவருகிறது. இதற்கு சற்று தூரத்தில் நைசாமுடீன் என்னும் ஒரு மகமதிய ஞானியின் சமாதி ஸ்படிகக் கற்களாலேயே கட்டபபட்டிருக்கிறது. இப்படியே சமாதிகளாக்கப்பட்ட கட்டடங்களுக்கும் அங்கங்கே செய்யப்பட்டிருக்கிற சிங்காரத் தோட்டங்களுக்கும் கணக்குகளேயில்லை.

13. பட்டணத்திற்கு தென்மேற்கே சற்று தூரத்தில் ஜயசிங் மகாராஜாவால் கட்டப்பட்ட நக்ஷத்திரமேடையும் பல யந்திர கட்டடங்களும் காணப்படுகின்றன. இவைகள் பாழடைந்துக்கொண்டுவருகின்றன. இந்த மாதிரி காசிக்ஷேத்திரத்தில் ஒரு எந்திர கட்டடமிருக்கிறது. இந்த யந்திரமூலமாய் வானத்தில் காணப்படுகிற கிரகங்களின் போக்குகளையும் அவைகளின் பலன்களையும் கண்டு வேலைசெய்யத்தக்க நூல்வல்லவர்கள் இக்காலத்தில் ஒருவருமில்லாததினலேயே இந்த கட்டடங்கள் கிலமடைகின்றன என்பதற்கு தடையில்லை.

14. இங்கிலீஷ் கவர்ன்மெண்டு ஸ்தாபிக்கப்படுவதற்குமுன் பரதக்கண்டத்திற்கே தலைமைப்பட்டணமாய் வெகு சிறப்பும் சீரும் பொருந்தி விளங்கிய இந்திரப்பிரஸ்தம் என்ற இந்த டில்லியானது பல தடவைகளில் இடிக்கப்பட்

டும், தீக்கொளுத்தப்பட்டும், கொள்ளை யடிக்கப்பட்டும், சிற்சில ராஜர்களால் கட்டப்பட்டும் வந்திருந்தபோதிலும், பூர்வத்தில் இதன் நிலைமையை, இப்பொழுதிருக்கப்பட்ட அழிவுகளையும் சிதைவுகளையும்கொண்டு யோசித்து நிதானிக்கப்புறப்படுகையில், மனதிற்கு சஞ்சலமுண்டாய் கண்களில் நீர் பெருகுமேயன்றி அதன் பூர்வத்திய நிலைமையில் நூற்றில் ஒரு பங்கைக்கூட அறிவது சாத்தியமன்றென்றும் இனி எக்காலத்திலும் அப்பூர்வ நிலைமையுண்டாகப் போகிறதில்லையென்றும் உறுதியாகக்கூறலாம். இதன் இயற்கையமைப்பையும் சிரேஷ்டத்தையும் நமது அங்கிலேய கவர்ன்மெண்டார் அறிந்தே 1876-ம் வருஷத்தில் கவர்னர்ஜெனரல் லார்ட் லிட்டன் மகாராணியவர்களுக்கு சக்கரவர்த்தனிப்பட்டம் கொடுக்கப்பட்ட தர்பாரை இவ்விடத்தில் நடத்தினர். பிறகு 1903-ம் வருஷத்தில் லார்ட் கர்ஜன் என்ற கவர்னர் ஜெனரலும் நமது ஏழாவது எட்வர்ட் சக்கரவர்த்தியவர்களுக்கு முடிசூட்டுக் கொண்டாட்டத்தையும் இந்த விடத்திலேயே நடத்தினர். இத்தேசத்திலுள்ள பலமகாராஜாக்களும், நபாபுகளும், ராஜாக்களும், கவர்னர்களும், தாகூர் சாயபுகளும், ஐகோர்ட்டு ஜட்ஜிகளும், ஜமீன்தாரர்களும், மிட்டாதாரர்களும் மற்ற பல ராஜாங்க உத்தியோகஸ்தர்களும், பிரபுக்களும், தேசாபிமானிகளும் தங்கள் பரிவாரங்களுடன் ஒருவாரகாலம் வரையில் இவ்விடத்தில் தங்கி மேற்சொன்ன தர்பார் மகோற்சவ கொண்டாட்டத்தை சிறப்பிக்கவும் ஒவ்வொரு மகாராஜாவும் கவர்னரும், சக்கரவர்த்தியின் சகோதரர் கனாட்கோமகன் பிரபுவும், லார்ட் கர்சன் பிரபுவும், ஒவ்வொரு ஐராவதத்தின் பேரில் ஏறிக்கொண்டு வெகு ஆடம்பரமாய் சென்ற ஊர்கோலத்தை நடத்தவும் இதுவே தகுந்தவிடமென்று கண்டு நடத்தி சிறப்படையச் செய்திருப்பதே இப்பட்டணத்தின் பெருமைக்குத் தகுந்த அத்தாக்ஷியாகுமன்றோ?

15 இப்பொழுது இது ஒரு முனிசிபல் பட்டணம். சுமார் இரண்டு இலக்ஷம் ஜனங்கள் வசிக்கிறார்கள். தற்கால நாகரீகப்படி கட்டப்பட்ட கட்டடங்களாகிய, கவர்ன்மெண்டு காலேஜ், பாங்கி, சென்ஜேம்ஸ்சர்ச்சு, முதலியவைகள் பார்க்கத்தக்கவைகளே.

16, ஜி. ஐ. பி. ரயில் ஸ்டேஷனானது ஒரு பெரிய அரண்மனை போன்ற பிர்மாண்டமான கட்டடம். இதற்கு ஆறு பிரயாண மேடைகளிருக்கின்றன. டிக்கட்டுகள் எப்பொழுதும் கொடுக்கப்படுகின்றன. வண்டிகள் சதா புறப்பட்டுக்கொண்டும் வந்துகொண்டுமிருக்கின்றன. 3-வது வகுப்பு பிரயாணிகள் தங்குமிடத்தைப் பார்த்தால் ஒரு நாடகசாலைபோல் சுமார் 2500 ஜனங்கள் தங்கும்படி விஸ்தீரணமுள்ளதாயிருக்கிறது. இது டில்லி அம்பலா, கல்கா இருப்புப்பாதைக்கும், இராஜ புத்தானா ஸ்டேட் இருப்புப்பாதைக்கும், கிழக்கு இந்தியா இருப்புப்பாதைக்கும். ஜி. ஐ. பி. இருப்புப்பாதைக்கும் சந்திப்பு ஸ்டேஷனானதால் போக்குவரத்து செய்யும் பிரயாணிகளுக்கு கணக்கு இவ்வளவென்று சொல்லமுடியாது. இவ்விடத்திலும் எக்கா, பக்கி என்ற குதிரைவண்டிகள் ஏராளமாய் கிடைக்கின்றன. எக்கா என்பது பிரயாணத்திற்கு சற்றும் தகாதவண்டிகள். பக்கி யென்பது நமது தென்னாட்டில் கோச்சென்றுசொல்லும் வண்டிகளே. இவற்றிற்கு தினத்திற்கு ரூபாய் மூன்று வாடகை கொடுக்கவேண்டும்.

17. இத்தேசத்தின் பூர்வஸ்திதியை நன்றாயறிந்துகொள்ள இஷ்டமுள்ளவர்கள் இந்த டெல்லிபட்டணத்தை அவசியம் பார்க்கவேண்டுமென்று கூறி முடிப்போம்.

T. C. வேங்கட்டரமணையர்.

## SANKARA-PRYAN.

## சங்கரப்பிரியன்.

### XI. சாஸ்திரிகள்.

முந்திய அதிகாரத்தில் சொன்னபடி அரசனது கனிஷ்டபுத்திரன் புத்திரபாக்கியனுக்கும் சேதுபதி அரசன் குமாரத்தி குசுமப்பிரியைக்கும், வெகு சம்பிரமமாய்க் கலியாணம் நடந்தது. கலியாணவிருந்தில் சாப்பிட்டு விட்டு எதிர்த் திண்ணையில் உட்கார்ந்திருக்கும் பிராமணர்களுள் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

ராமா சாஸ்திரிகள்:—ஓய் கனபாடிகளே உமக்கென்னகிடைத்தது?

கனபாடிகள்:—சாந்தியில்ஒருரூபாய், பூரியில் ஒருரூபாய், சில்லரையில் ஒண்ணரை ரூபாய். மொத்தம் மூன்றரைரூபாய். உமக்கெவ்வளவு?

ராமாசாஸ்திரிகள்:—என்ன உம்மைவிடஒரு ரூபாய் ஜாஸ்தி. அதுவும் நேற்றயதினமே புரோகிதம் பஞ்சுசாஸ்திரிகளிடம் கேட்டுக் கொண்டேன். காலமே எல்லாருக்கும் முதல் வந்து அவர்கிட்ட உட்கார்ந்தேன். மஹாராசன் ஏதோ ஒத்தாசை பண்ணினர் கேட்டுக்கொண்டதற்கு.

குப்புசாஸ்திரிகள்:—ஓய் சாஸ்திரிகளே என்ன புரள்கிறீர். போளியும் லட்டும் கொஞ்சம் அதிகமாகப் போய்விட்டதோ? ஜீரணமாக வில்லையாக்கும்! ஒரு அவுன்ஸ் கடைக்குப் போய் சாப்பிடுமே! எல்லாம் பஸ்மீகரமாய்ப் போய்விடுகிறது.

நாணுசாஸ்திரிகள்:—ஓய் சேஷ சாஸ்திரிகளே என் சொட்டச் சொட்டவருகிறீர்? குளத்தில் விழுந்து விட்டீரா என்ன?

சேஷசாஸ்திரிகள்—நான் சொட்டச் சொட்ட வருவதற்கு நீர்தான் காரணம். நீர் முதல் பந்தியில்சாப்பிட்டது எனக்குத் தெரியும். மறுபடி இரண்டாம் பந்திக்கும் போய உட்கார்ந்தது தெரியாது. ஆகையால் நான்சீக்கிரம் சாப்பிட்டுவிட்டு கை அலம்ப குளத்துக்குப்போனேன். அவிடம் மிதந்து கொண்டிருந்த எருமைக்கன்றுக்குட்டியை நீர் தான் முதல்பந்தியில் சாப்பிட்டீரே, கையலம்ப வந்து விழுந்து விட்டீராக்கும், என்று நினைத்து தூக்கப்போனேன். அது முட்டிப் புறட்டிவிட்டுது. என்ன செய்யட்டும்!

நாணுசாஸ்திரிகள்:—சரி! போது வீணாய்ப் போகிறது! அந்த உத்திரக்கோடியில் சீட்டுக் கட்டிருக்கிறது, எடுத்துப்போடும். ரேழியில் மேல் வேஷ்டி இருக்கு, அதைப்பிரித்துப் போடும். புதுக்கட்டு அழுக்காப்போம். நாலு பேரில் ஜயம் வைத்து நாலாட்டம் ஆடலாம்.

எம். என். கணேசய்யர்.

---

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

### 23-வது அதிகாரம்.

இராமச்சந்திரய்யர் பட்டணத்தில் படித்துக் கொண்டிருப்பதாக நாம் முன்னமேயே சொல்லி இருக்கிறோம். அவருக்கு பட்டணத்தில் நிர்விசாரமாகப் படிக்க முடியவில்லை. காமேசுவரய்யர் ஒரு மாசத்திலாவது அவருக்கு சரியாக பணம் அனுப்பினது கிடையாது. இராமச்சந்திரய்யரும் அடிக்கடி படிப்பை நிறுத்திவிடலாமா என்று பார்த்தார். ஆனால் பாதியில் நிறுத்தவும் சரிப்படவில்லை. முத்தாறுதாண்டி கரைசமீபிக்கும்போது ஒரு ஓடைக்கு பயப்படலாமா என்று இராமச்சந்திரய்யர் நினைத்து படிப்பை பெவ்விதத்திலும் முடிக்கிறதென்று தீர்மானித்தார். அடிக்கடி பூவரசநல்லூரிலிருந்துவரும் மனுஷ்யாள் மூலமாக காமேசுவரய்யருடைய துர்நடத்தைகளும் அவருக்குத்தெரிந்தது. இராமசந்திரய்யருக்கு அதிக கவலையினால் படிக்கக்கூட முடியவில்லை. காமேசுவரய்யர்மீது ஒரு வெறுப்பும் ஏற்பட்டது. நாம் இங்கே கஷ்டப்பட்டுகொண்டிருக்க, பிரிந்து போன சகோதரனுடைய பெண்ணுக்கு வேண்டியதையெல்லாம் செய்யவும் கூத்தியாருக்கு நகை பண்ணிப்போடவும் நம்மை கவனியாமலும் விட்டிருக்கிறாரே என்கிறதை அவர் நினைக்க நினைக்க காமேசுவரய்யர்மீது வெறுப்பு அதிகரித்தது. இரா

மச்சந்திரய்யர் எப்போது பரீக்ஷை வரப்போகிறதென்று காத்திருந்தார். பரீக்ஷைகாலத்தில் மட்டும் வீட்டுக்கவலைகள் ஒன்றையும் மனதில் வைக்காமல் நன்ருய்ப்படித்தார். கடைசியில் பரீக்ஷையும் வந்தது. இராமச்சந்திரய்யர் படித்தவகுப்பு ஸ்வல்பமாக இருந்தபோதிலும் பரீக்ஷை கேள்விகள் சுளுவாக இருந்தபடியால் பரீக்ஷைக்கு நன்ருய் எழுதினர். பரீக்ஷை ஆனவுடனே இராமச்சந்திரய்யர் ஒருநாள்கூட தாமதிக்கவில்லை. உடனே பூவரசநல்லூருக்குப் புறப்பட்டார். பூவரசநல்லூரில் வந்து சேர்ந்ததும் ஊர் முழுவதும் காமேசுவரய்யர் நடத்தைகளைப்பற்றி இராமச்சந்திரய்யரிடம் கேலி செய்தார்கள். காமேசுவரய்யருக்கு இப்பொழுது முக்கிய சிநேகிதம் ஆஷாடபூதி வெங்கடராம சாஸ்திரிகள், நாரதசாஸ்திரிகளென்கிற நாரணசாஸ்திரிகள், காவாலி சுப்பய்யன் மூவருமே. இவர்கள் எப்போதும் காமேசுவரய்யரை சுற்றிக்கொண்டே இருந்தார்கள். நாராயண சாஸ்திரிகளும் வெங்கட்டராமசாஸ்திரிகளும் ஜயிலிலிருந்துவந்து இரண்டுமாசம் தான் ஆயிற்று. நாராயண சாஸ்திரிகள் கமலாவடிக்குப் போக வெட்கப்பட்டுகொண்டு சம்மந்தி காமேசுவரய்யர் வீட்டிற்கே குடியாகவந்துவிட்டார். ஊரில் ஒருவருக்காவது காமேசுவரய்யர் நாராயணசாஸ்திரிகளை வீட்டில் வைத்திருப்பது சம்மதமில்லை. நாராயண சாஸ்திரிகள் வெங்கடராமசாஸ்திரிகள் இருவருக்கும் பூணூல் அறுக்கப்பட்டு மொட்டையடிக்கப்பட்டிருந்ததால் ஜயிலிலிருந்து வந்தவுடனே நேராக ராமேசுவரம் போய் பரிகாரஞ்செய்து கொண்டு குடுமி வைத்துக்கொண்டுவந்தார்கள். இருவர்களும் தங்கள் குடுமி மொட்டையானதைக் கண்டு அவமானப்படுவதை விட்டு தலையைத் தடவிக்கொண்டு இப்போதுதான் சுகமாக இருக்கிறது! ஜயிலில் நமக்கு வேண்டுமென்றே அவனே மொட்டை அடிக்கச்சொன்னது நல்லது என்று ஏதோ இவர்கள் வேண்டுகோளின் பேரில் மொட்டைஅடிக்கப்பட்டதுபோல் பெருமைபேசிக்கொண்டார்கள். ஊரில் எல்லோரும் இவர்கள் இருவரையும் தள்ளிவைக்க வேண்டுமென்ருர்கள். காமேசுவரய்யர் அதற்கு எதிர்க்கக்ஷி கட்டிக்கொண்டு சண்டைக்கு வந்தார். பிறகு எல்லோரும் நமக்கென்ன பொல்லாப்பு என்று சொல்லி காமேசுவரய்யர் வீட்டுக்குப்போவதை விட்டுவிட்டார்கள். இராமச்சந்திரனுக்கு இதையெல்லாம் கேட்கக் கேட்க காமேசுவரய்யர்மீது வெகு வெறுப்புஉண்டாயிற்று. நாராயண சாஸ்திரிகள் தன் பெண்ஜாதியைக்கொன்றவரல்லவா! அவரைப்பார்க்கக்கூட இராமச்சந்திரனுக்கு இஷ்டமில்லை. காமேசுவரய்யருக்கு அவர் தன் நாட்டுப்பெண்ணைக்கொன்றவரென்கிற ஞாபகமிருந்தால் அவரை வீட்டில் இருக்கச்சொல்வாரா? அவரை எப்போது வீட்டில் இருக்கச்சொன்ஞரோ அப்போதே காமேசுவரய்யர் பிரியம் ஒரு பிரியமல்லவென்று இராமச்சந்திரய்யர் அறிந்துகொண்டார். இதுபோதாமல் காவாலி சுப்பய்யருக்கு காமேசுவரய்யர் தன் நிலத்தை சலீசாய் குத்தகை கொடுத்ததும் தெரிந்தது. சொர்ணத்துக்காக வீடுகட்டினதும் கிருஷ்ணசாமி அய்யர் இறந்துபோயும் அவன்பிள்ளை சாந்திமுகூர்த்தத்துக்கு காமேசுவரய்யர் நூறு ரூபாய் ஒதியிட்டதையும் சொல்லி ஊரில்எல்லாரும்கேலிசெய்தார்கள். தங்கத்துக்கு நகைகள் செய்ததும் தங்கம் காமேசுவரய்யரைமயக்கி அவள் கேட்டதெல்லாம் காமேசுவரய்யர் கொடுத்துவந்ததையும் இராமச்சந்திரய்யருக்கு பார்த்துப் பொறுக்கமுடியவில்லை. மேலும் காமேசுவரய்யர் திறவுகோலை தங்கத்தின் இடத்திலேயே கொடுத்து அவள் பணப்பெட்டிமுதல் திறவுகோல் வைத்திருப்பதையும் பணம்எடுத்துக்கொடுப்பதையும்இராமச்சந்திரய்யர் வந்தபிறகாவது காமேசுவரய்யருக்கு இனி நமது இராமச்சந்திரன் வீட்டுக்காரியத்தைகவனிக்கக்கூடியவஞகஇருக்கிருனென்றுதிறவுகோலைஅவனிடம் கொடுக்காமல் தங்கத்தினிடம் கொடுப்பது இராமச்சந்திரனுக்கு கௌரவக்குறைவென்ருவதுதெரிய வேண்டாமா! அதுவும்தெரியவில்லை. இராமச்சந்திரனுக்கு இந்த வித்தியாசங்களை யெல்லாம் பார்த்து சகிக்கமுடியவில்லை. இப்படி இருக்க இராமச்சந்திரன்காரியஸ்தர்களைக் கூப்பிட்டு கடன் என்ன, வரும்படி யென்னவென்று கேட்டான். காரியஸ்தர்கள் சொத்தின் பாதிக்கு கடன் இருக்கிறதென்று சொல்லி கணக்குகளை யெடுத்துக் காண்பித்து இதுதான் சமயமென்று கண்டு காமேசுவரய்யர் குத்தகை கொடுத்த நிலங்களின் வரும்படியும் அதில் பாதிக்கு காமேசுவரய்யர் சுப்பய்யனுல் ஏமாற்றப்பட்டு குத்தகைக்கு கொடுத்திருப்பதையும், கணக்கு மூலமாகக் காட்டினர்கள். இராமச்சந்திரய்யருக்கு இதையெல்லாம்பார்க்க காமேசுவரய்யர்மீது வெகுகோபம்உண்டானது. காமேசுவரய்யரை அவருடைய கடன்காரர்கள் தொகை கொடுக்கும்படிக்காவது அல்லது இராமச்சந்திரய்யரும் சேர்ந்து எழுதிக்கொடுக்கும்படியாவது கேட்டார்கள். கடனும் ஒன்ருவது ஒரு ரூபாய் வட்டிக்குக் குறைந்தது அல்ல. இராமச்சந்திரய்யர் இனி கடனை வைத்திருப்பது சரியல்லவென்றும் குடும்பகாரியத்தை காமேசுவரய்யரிடம்

விடக்கூடாதென்றும் தீர்மானித்தார். காமேசுவரய்யர் கடன்காரர்கள் நிர்ப்பந்தத்தால் ஒருநாள் இராமச்சந்திரனைக் கூப்பிட்டு அவர்களுக்கெல்லாம் உன் கையெழுத்து வேணுமாம் அப்பா, நீயும் சேர்ந்து தஸ்தாவேஜி எழுதிக்கொடுக்கவேணுமென்கிறார்கள் என்றார். இராமச்சந்திரய்யர், காமேசுவரய்யர் மேலே சொன்னபடி சொல்லியதைக்கேட்டதும், இனி நாம் சங்கோசப்படக்கூடாது என்று தீர்மானித்து, காமேசுவரய்யரிடம் கையெழுத்துப் போடமாட்டேனென்று சொல்லாமல் இந்நாளில் கடன் என்பதே ஆகாது என்பது உங்களுக்குத் தெரியாதா? இதில் நானும் எழுதிக்கொடுத்து அந்தக்கடனை வைத்திருப்பதைவிட பூமியைவிற்று கடனை அடைத்துவிடலாமே என்றார். காமேசுவரய்யருக்கு ஸ்தோத்திரம் செய்து அவர் சொல்வதையெல்லாம் சரியென்று சொல்லவேண்டும். அப்படிச்சொல்லக்கூடியவர்கள் தங்கம், வெங்கட்டராமசாஸ்திரிகள், சுப்பய்யன் இவர்கள்தான். இராமச்சந்திரய்யர் குணம் இதற்கு நேர்விரோதமானது. அவர் நாம் கடவுளை ஸ்தோத்திரம் செய்யவேண்டுமேயல்லது ஒரு உபயோகமுமில்லாத மனிதனை ஏன் ஸ்தோத்திரம் செய்யவேணுமென்பார். இராமச்சந்திரய்யர் மேலே சொன்னபடி சொன்னதும் காமேசுவரய்யருக்கு கோபமும் வந்துவிட்டது. உன்னை மற்றயோஜனைகள் கேட்கவில்லை. அதுகளெல்லாம் எனக்குத் தெரியும், கையெழுத்துப் போடுவாயா மாட்டயசா? என்றார். இராமச்சந்திரய்யர், இவர் வீம்புக்காரர், இவருடன் நாம் இப்போது எதிர்த்துப்பேசக் கூடாதென்றுநினைத்துஅதற்கேற்றபடி "கையெழுத்துபோடுகிறேன், குத்தகை என்ன சுப்பய்யருக்கு நிரம்பா சலீசாககொடுத்துவிட்டதாகசொல்லுகிறார்க"ளென்றார். காமேசுவரய்யர் நான் அவனுக்கு நிச்சயம்செய்த குத்தகையை மாற்றி என் சொல் அழிந்துபோகவேணுமென்று பார்க்கிறாயோ, அதை நான் ஒருபோதும் மாற்றமாட்டேனென்றார். இராமச்சந்திரய்யர் அந்தக்காரியமும்பலிக்காதென்றுதனக்குள் நினைந்து, நாரயணசாஸ்திரிகள் உங்கள்நாட்டுப்பெண்ணைக்கொலைசெய்ததை மறந்துவிட்டீர்களா என்றார். காமேசுவரய்யர் அவர் கொலைசெய்திருந்தால் அவரை தூக்கில் போட்டிருக்கமாட்டார்களா! ஏன்அவர் வீண்தோஷம்சொல்லுகிறாய் என்றார். இராமச்சந்திரய்யர் இதுவும் பலிக்காதென்று, நல்லது வீடுதான் சொர்ணதுக் கென்று கட்டினீர்களே அந்த நம்மபேரிலேயே வைத்து அவர்கள் குடி மட்டும் இருந்துகொண்டு வரச்சொல்லுகிறதுதானே! அவள் பேருக்கே தானமாக அதற்குள்ளேயும் என் கொடுக்கவேண்டும் என்றார். காமேசுவரய்யர் அடே கையெழுத்துப்போட இஷ்டமுண்டானால்போடு அதற்காக இந்தக் கேள்வி யெல்லாம் கேட்கவேண்டாம். நான் என் இஷ்டம்போல் செலவு செய்வேன். அதை நீயார் கேட்பதற்கு என்றார். இராமச்சந்திரய்யர், ஆனால் சரி, கேட்கவில்லை என்று போய்விட்டார். பிறகு காமேசுவரய்யர் இந்த சமாசாரங்களில் ஒன்றையாவது விடாமல் தன் ஆலோசனை சபையில் தெரிவித்தார். வெங்கட்டராம சாஸ்திரிகள் என்ன அண்ணா நேற்றைய பையனா உங்களை இத்தனைகேள்விகளும்கேட்கிறான் என்றார். நாராயணசாஸ்திரிகள் அவன் கேழ்க்காமல் என்ன செய்வான் அண்ணா எல்லா சொத்தையும் அவனுக்கு கொடுக்க போகிறாரல்லவா, என்றார்.

ஆகையால் அவன் இப்போதே தன்னை யெல்லாருக்கும் மேல்யஜமானனென்று நினைத்து விட்டான். அண்ணா நான் ஊருக்குபோகிறேன் அவன் இனிமேல் வீட்டுக்கு யஜமானன். அவன் வேண்டாம் என்னும் போது என்னை நீங்கள் இரு என்ற சொல்ல இனி உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்றார். காமேசுவரய்யர் அவன் கிடக்கிறான் காணும்! அவனிடத்தில் என் கட்டை தெற்கு வடக்கில் போகிற வரையில் ஒரு அதிகாரத்தையும் கொடுக்கமாட்டேனென்றார். சுப்பய்யன் கொடுக்காமல்போனால் உங்களை யார் விடுகிறார்கள்! அவன்தான் வெகு அனுபோகஸ்தன்போல் ஊரில் போக்கிலி பேச்சைகேட்டுக் கொண்டு நிலங்கள் கண்டு முதலானதுகள் எல்லாம் தெரிந்தவன்போல் அண்ணாவை நான் ஏமாற்றி விட்டேன், குத்தகை செல்லாது, ரத்து பண்ணவேணுமென்கிறானே! அண்ணா இனி உங்களுக்கு சக்தியில்லை. அவன் சொல்தான் ஏறும், நானும் வேணுமானால் குத்தகையை விட்டுவிடுகிறேன். முதல் போகத்திலேயே எனக்கு நஷ்டம் வந்து விட்டது. இந்தக் காலத்துக்கு நாம் நல்லது செய்வது ஆகாது. எனக்கு கஷ்டமாயிருக்கிறது! (அந்த போகத்திலேயே ஒரு வருஷத்து மாகுலை எடுத்து விட்டார்) இப்படி யார் சொல்லபோகிறார்களென்றுதான் நானும்காத்திருந்தேன். கண்ட இடத்தில் எல்லாம் நான் ஏமாற்றி விட்டேனென்று இது என்ன பேச்சு அண்ணா! வேண்டாம் உங்கள் குத்தகையை நீங்களே ஒப்புக்கொள்ளுங்கள் என்றான். காமேசுவரய்யர், சுப்பு நீ இதை யெல்லாம் கவனிப்பானேன்! நான் உன்னை விடச்சொன்னாலல்லவா நீ விடவேண்டும்! அந்தப் பயல்

சொன்னால் அது உனக்கு என்ன என்றார். வெங்கடராமசாஸ்திரிகள் "என்னஐயா கலியுகத்தின் கூத்து! நம்ப காலத்தில் அய்யாசாகிற வரையில் அவர் ஒன்று சொன்னால் நான் பதில் சொல்ல மாட்டேன். கலி முற்ற முற்ற சிறுவர்களெல்லாம் பெரியவர்களை லட்சியம் செய்கிறதில்லை. அதிகாரம்செய்ய ஆரம்பித்து விடுகிறார்கள். (இவர்பிள்ளை இராமச்சந்திரனை விட சின்னவன் அவனிடம் வெங்கடராமசாஸ்திரிகள் தன் சொத்தை ஒப்பித்துவிட்டு அவனிடம் நடுங்கிக் கொண்டிருக்கிறார்.) காமேசுவரன்னை தன் சொத்து முழுவதும் கொடுக்கப்போகிறது கூட அந்தப் பயனுக்கு லட்சியமாக இல்லை பாருங்கள்" என்றார்.

---

## CURRENT NOTES AND TOPICS

## விசேஷக் குறிப்புகளும் விஷயங்களும்.

---

**இரண்டு புதிய சட்டங்கள்**

ஜூன்மீ பிறக்கவும், இரண்டு புதிய சட்டங்கள் அவசர அவசரமாகச் செய்யப்பட்டு, ஒரே நாளில் சட்டமாகி ஊர்ஜிதத்திற்கு வந்தன. அவை வெடி மருந்துகளைப் பற்றிய சட்டமும், குற்றம் செய்யும்படி ஏவும் பத்திரிகைகளை யடக்குவதற்கான சட்டமுமாம். இவ்விரண்டு சட்டங்களும் பெங்காளத்தில் நடந்த வெடிகுண்டு அக்கிரமங்களினால் ஊர்ஜிதத்துக்கு வரலாயின. ஜூன்மீ 8வ திங்கட்கிழமையன்று இவை இந்தியா சட்ட நிரூபண சபையில் சட்டமாயின. அன்றைக்கே வாசித்து, ஆலோசித்துத், தீர்மானித்து சட்டமாகப் பாஸ் செய்து இராஜப் பிரதிநிதி யவர்களுடைய சம்மதமும் பெற்று சட்டமாக ஊர்ஜிதத்துக்கு வந்து விட்டன. வெடிமருந்துகள் சட்டம், வெடி மருந்துகளுக்கு மாத்திரமே யன்றி, வெடி மருந்துகள் செய்வதற்கு கசாரனக் களுக்கும் "வெடி மருந்து" என்கிற பேர் பொருந்தும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. யாரிடந்திலாவது வெடிமருந்துகளிருந்து அதற்குத் தக்க ஜவாபு சொல்லத்தவறினால் அது குற்றமாக எண்ணப்படுமென்று சட்டம் செய்திருக்கிறார்கள்.

**பத்திரிகைகளை யடக்குவதற்கான சட்டம்.**

பத்திரிகைகள் குற்றஞ்செய்ய ஏவுவதை யடக்குவதற்கான சட்டம் மிகவும் கடுமையானதாக விருக்கிறது. கொலை முதலிய பெரிய பாதகங்கள் செய்ய ஏவும் பத்திரிகைகளை யடக்க வேண்டியதவசியம் என்பதைப் பற்றி யாதொரு ஆக்ஷேபமுமில்லை. ஆனால் புதிதாய் சட்டம் செய்திருக்கிறதைப் பார்த்தால் போலீஸார் இஷ்டம்வைத்தால் எந்தப் பத்திரிகையையும் சந்தியிலிழுத்துவிடலாமென்று தோன்றுகிறது. கவர்ன்மெண்டார், மாஜிஸ்திரேட்டு மூலமாகக் குற்றம் செய்த பத்திரிகைகள் அச்சிடப்படும் சாமான்களையும், அச்சாபீஸையும் கூட ஜப்திசெய்து கவர்ன்மெண்டுக்கு சொந்தமாக சேர்த்துக் கொள்ளலாம். சட்டம் இதற்கெல்லாம் இடம் தருகிறது. இப்படி அவசர அவசரமாய் சட்டம் செய்வதில் ஒரு இடையூறிருக்கிறது. அவசர நிமித்தம் தற்போது கவர்ன்மெண்டார் கண்முன்னுள்ள ஆபத்தை நீக்குவதற்கான கெடுபிடி நிர்ப்பந்தங்களை யமைத்து சட்டம் செய்துவிட்டு, கவர்ன்மெண்டுக்கு இவ்வளவு அதிகாரங்களிருந்தாலும், கவர்ன்மெண்டார் கண்டபடி இந்த அதிகாரத்தை உபயோகிக்கப் போவதில்லை யென்கிற உறுதிமட்டும் கொடுக்கிறார்கள். இந்த வாக்கு காற்றாய்ப் பறந்து போக, சட்டம் மட்டும் சட்ட புஸ்தகத்தில் சேர்ந்து சட்டமாக விருக்கிறது. பின்னால் ஒரு அவசரம் நேர்ந்தபொழுது ஒரு உத்தியோகஸ்தர் அல்லது பெரிய அதிகாரி சிறிது ஆலோசனைக்குறைவாக ஒரு விஷயத்தில் துணிந்து நடக்க நேரிடும்போது இச்சட்டத்தை உபயோகிக்க, முதலில் அற்பமாயுள்ள காரியம் போகப் போகப் பிரமாதமாக வளர்ந்து வருகிறது. தென்றல் முற்றிப் பெருங் காற்றாயிற்று என்னும் பழமொழியின் உண்மையை இப்படிப்பட்ட சமயங்களில் நிதரிசனமாகக் காணலாம். மனிதஸ்வபாவமே தப்புத்தவறுதலுக்குட்பட்டதாக விருப்பதால், அதிகாரிகள் வரம்பு கடந்த அதிகாரம் உபயோகிக்கத்தக்கதாகச் சட்டம் செய்து வைப்பது மொத்தத்தில் இராஜ்ய க்ஷேமத்துக்கு அனுகூலமானதல்ல. ஆனாலும் இப்பொழுதைப் போலொத்த கலபைக் காலத்தில் கவர்ன்மெண்டார் தங்களுக்கு எதிராகச் சொல்வதெல்லாவற்றையும் இராஜாங்கத்துக்கு விரோதமாகச் சொல்வதாக நினைக்கக்கூடியவர்களா யிருப்பதால், அதையும் நன்றாக வற்புறுத்திச் சொல்லக்கூடவில்லை. இப்படி உண்மையை உள்

ளபடி சொல்லப் பின்வாங்கும் படியான ஸ்திதியில் தேச சட்டம் இருப்பதே தப்பு என்று மட்டும் உறுதியாய்ச் சொல்வோம். ஆனால் கவர்ன்மெண்டாரும் ஜனங்களுடைய பொதுமனம் இப்படி யிருக்கிறதென்று அறியக்கூடாதவர்களாயிருப்பதால், அவர்கள் சிலர் செய்த அக்கிரமங்களைக் கொண்டு எல்லாருமே அப்படி யிருந்தாலென்ன செய்கிறதென்று பயந்து சிந்திக்கலாம். அப்படி பயந்து சிந்திப்பது இராஜாங்க நிபுணத்துவத்துக் கழகன்று. "எல்லாருமே அப்படியிருந்தால்" பொதுஜன விரோதமான சட்டத்துக்கு என்ன செல்வாக்கு இருக்கப்போகிறது! இராஜப் பிரதிநிதி லார்ட் மிண்டோ அவர்களே, கவர்ன்மெண்டார் ஜனங்களுடைய மனதிலிருக்கும் எண்ணங்களை யுணரமாட்டாமல், "ஒற்றையோ, இரட்டையோ?" என்கிற விளையாட்டுப் போல் இராஜ்யகாரியங்களை நடத்த வேண்டியிருப்பதினால் வரும் கெடுதியை யுணர்ந்தவராய்க் காட்டியிருப்பதால், இந்த உண்மையை மேன்மேலும் வற்புறுத்திக் கூறுவதில் பிரயோஜனமில்லை. காலம் கெட்டுக்கிடக்கிறபடியால், எல்லாம் கோணலாகவே போகிறது! "கெடுவான் கேடுநினைப்பான்" என்பது உண்மையாதலால் ஸத்துக்களும், சாதுக்களும், இப்படி யெல்லாம் கோணலாகப் போகிறதேயென்று தாங்களும் கோணல் வழியில் சிந்தையைச் செலுத்தமாட்டார்கள். ஸத்தியத்துக்குள்ள சக்தியும் வல்லமையும் அவர்களுக்கே தெரியும், "தர்மமே ஜயம்" என்பதின் உண்மையையுள்ளபடி ஸ்வானுபவத்தில் அறிந்தவர்களானபடியால், தர்மவழி தப்பாது, தர்மத்தை நிலைநாட்ட ஸத்யத்தைக் கைப்பிடியாகப்பிடித்து "ஸத்யமேஜயம்" என்பதில் நம்பிக்கை வைத்தவர்களாக ஊக்கம் குன்றாது உண்மைவழி நின்றுழைப்பார்களென்பது திண்ணம். அக்கிரமம் செய்தவர்கள் அழிந்துபோவதும் நிச்சயம்.

**குடிராம் போஸ்.** வெடிகுண்டு போட்டு இரண்டு குற்றமற்ற பெண்டுகளைப் பரலோகத்துக் கனுப்பிய குடிராம் போஸ் கேஸ் விசாரணையாகி முடிந்து, குற்றவாளியான குடிராம் தூக்கிலிட்டுக் கொல்லப்படும்படி மரண தண்டனை விதிக்கப் பெற்றான். அதன்மேல் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்துகொள்ளப் போவதாகச் சொன்னதால், அவனுடைய தண்டனை நிறைவேற்றப்படவில்லை. மரண தண்டனை விதிக்கப் பட்டதைக் கேட்டும், அவன் புத்திகலங்காது அலக்ஷியமாகவே சிரித்துக் கொண்டிருந்தானாம்.

இவனைப் பற்றி பார்லிமெண்டில் கேட்கப்பட்ட கேள்விகளினால், இவன் சித்தஸ்வாதீனமின்றி யிருந்ததாகத் தெரியவருகிறது. இவனைத் தூக்கில் போடுமுன், இவன் சித்தஸ்வாதீன மற்றவன் என்பதனுண்மையைப் பற்றி இந்தியா மந்திரி விசாரிக்கச்செய்வாரென்று உதவிமந்திரி வாக்குக் கொடுத்திருக்கிறார்.

**ஸர் உவில்லியம் க்ருக்ஸ்.** புரொபஸ்ஸர் ஸர் உவில்லியம் க்ருக்ஸ் என்பவர் புதிதாக ஒரு சிறு புத்தகம் போட்டிருக்கிறதாகத்தெரிகிறது. அதற்குபேர் "Experimental investigation of a New Force" என்று ஒரு விளம்பரத்தால் தெரிகிறது. ரூபா இரண்டு அனுப்பினால், 98-ப்பக்கங்களும், 13 சித்திரப் படங்களும் அடங்கிய இச்சிறு புஸ்தகம் எவருக்கானாலும் அனுப்பப்படுமென்று "சித்தாந்த தீபிகையில்" ஒரு விளம்பரம் செய்யப்பட்டிருக்கிறது. இதனால், தேகம் விழுந்துபோன பிறகும் ஜீவன் நிலைத்திருக்கிறது என்பது பிரத்தியக்ஷப்பிரமாணமாக எல்லாரும் ஒப்புக்கொள்ளும்படி நிரூபிக்கப்பட்டிருக்கிறதாகத் தெரியவருகிறது. இது உண்மையானால் (இவ்வாரிய தேசத்தில் எல்லாரும் இதை உண்மையென்றே நம்பியிருக்கிறார்கள்.) குற்றவாளிகளுக்கு மரணதண்டனை விதிப்பது ஜனக்ஷேமத்துக்கு அடுத்ததுதானோ என்கிற பெரிய கேள்வி பிறக்கும். ஒருவன் உயிருக்குத் துணிந்து ஒரு காரியம் செய்ய சங்கல்பித்துக் கொண்டு மரண தண்டனைக்கும் பயப்படாமல் அந்த சங்கல்பத்தை கடைப்பிடியாகப் பிடித்து நிற்பானானால், அவனுக்கு மரணதண்டனை விதித்து அவனை தேகத்தினின்றும் விடுவிப்பது ஜனசமூகத்துக்கு இடையூறேயன்றி அனுகூலமில்லையென்பது தத்துவஞானிகள் எல்லாரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. சங்கல்பபலம் இன்னதென்று தெரியாது தேகமே யெல்லாமென்கிற தப்புபாவனையினால் செய்யும் எல்லா நடபடிக்கைகளும் முடிவில் துன்பத்தைக்கொடுக்கும். ஆத்மவிவேகமின்றிச் செய்யும் அரசாக்ஷி "அரசியல்" என்னும் இராஜ்ய தர்மத்துக்கு ஒட்டிவராது. தர்மம் தலைகவிழ்ந்து போகாது காப்பாற்றவேண்டியது அரசியல் தர்மமானாலும், அரசனை தர்மவழிவிட்டு விலகாது நடக்கச் செய்வது புண்யாத்மாக்களின் பொறுப்பாம். ஆகையால் காலக்கேட்டைக் கண்டு, புண்யாத்மாக்கள் மனம் கலங்கிப்போகாமல், தைரியமாய் உண்

மையைப்போதித்து உண்மைச்குழைத்து வருவார்களென்பது திண்ணம். அவர்கள் இப்படி நடக்க வேண்டியது 'அவர்களுடைய ஸ்வதர்மமேயானுலும், இந்தியா மந்திரியாகிய லார்ட் மார்லி யவர்கள் இந்தியாவிலுள்ள புண்யாத்மாக்கள் ("the better mind of India" என்றுர் அவர்.) இந்தியாவை முன்னுக்குக் கொண்டுவரும் விஷயத்தில் பாடுபட்டுழைக்கவேண்டுமென்று அவர்களைத் தூண்டுவாரில்லையேயெனத் தூண்டாமற் றூண்டியிருப்பதால் அவர்கள் தங்களுடைய ஸ்வதர்மத்தினுலே மாத்திரமன்றி, இராஜதர்மத்தினுலேயும் உண்மைக்குழைக்கக் கட்டுப்பட்டவர்களா யிருக்கிறுர்கள்.

**கல்கத்தாவில் நடக்கும் வெடி குண்டு அக்கிரம க் கேஸ் விசா ரணை**

கல்கத்தாவில் வெடிகுண்டு அக்கிரம விஷயமாய் அனேகரைப் பிடித்துக் கைது செய்து அலிப்பூர் டிஸ்திரிக்ட் மாஜிஸ்திரேட்டு முன்னிலையில் விசாரணை செய்து வருவதில், கைதிகளில் ஒருவரான நரேந்திரநாத் கோஸ்வாமி யென்பவன் தன்னை விட்டுவிடுவதாயிருந்தால், தான் எல்லாவற்றையும் சாங்கோபாகமாகச் சொல்லிவிடுவதாகச் சொன்னதின் பேரில், கவர்ன்மெண்டார் அவனை "அரசின் சாக்ஷி" யாக வெடுத்துக் கொண்டு, அவன் சாங்கோபாங்கமாகச் சொல்வதை யெல்லாம் சாக்ஷியமாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று மிஸ்டர் நார்டன் மூலமாக விண்ணப்பம் செய்து கொள்ள, அப்படியே அவனுடைய சாக்ஷியம் மாஜிஸ்திரேட்டால் பதிவு செய்யப்பட்டு வருகிறது. அவன் யார் யார் கவர்ன்மெண்டுக்கு விரோதமாகக் கிளம்ப வேண்டுமென்று இரகசியத்திலுழைத்து வந்தவர்களைச் சேர்ந்தவர்களென்று சொல்கிறுனே, அவர்களை யெல்லாம் பிடித்துக் கைது செய்து விசாரணைக்குக் கொண்டுவருவதில் போலீஸார் வெகு ஊக்கமாயிருந்துழைத்து வருகிறுர்கள். அந்த கோஸ்வாமி சொல்வதெல்லாம் உண்மையாயிருக்குமானுல் கவர்ன்மெண்டுக்கு விரோதமான இரகஸ்ய சங்கமொன்று வெகு தூரம் கிளைவிட்டுப் பரவி யிருப்பதாக நம்பும்படியா யிருக்கிறது. கேஸ் விசாரணையாகி வருகிறபடியால் அவன் சொல்வதின் மெய்மை பொய்மையைப் பற்றி அதைப் பற்றி விசாரணை செய்யும் மாஜிஸ்திரேட்டு ஒருவித முடிவுக்கு வருமுன் நாம் ஒன்றும் சொல்லக் கூடியதாயில்லை.

**திருநெல்வேலி ஸெஷன்ஸ்.**

திருநெல்வேலி ஸ்பெஷல் ஸெஷனில், மிஸ்டர் பின்ஹி முன்னிலையில் சிதம்பரம் பிள்ளைமேல் வந்த கேஸ் விசாரணையாகி வருகிறது. "அம்பட்டன் குப்பையைக்கிளறினுல் அவ்வளவும் மயிர்" என்று சொல்லும் பழமொழி போல், பத்திரிகைகளைப் பிரித்தால், 'ஸெடிஷன்' கேஸ் விசாரணைகளே மிகுதியாயிருக்கின்றன. திருநெல்வேலியில் மூன்று நான்கு மாசமாக சுப்ரமணியசிவா, சிதம்பரம் பிள்ளை, இவர்கள்பேரில் கொண்டுவந்த பிரமாதக்கேஸ் விசாரணையாகிவர, கனூர் டிப்டி மாஜிஸ்திரேட்டு முன்னிலையில் மைலாப்பூர் எ. கிருஷ்ணஸ்வாமி சர்மா என்னும் ஒரு வாலிபன் பேரில் ஒரு ஸெடிஷன் கேஸ் விசாரணையாகிவருகிறது. சென்னைமாநகரில் யாரோ ஒரு பையனைப் பிடித்து வெடிகுண்டு அக்கிரமங்களில் சம்பந்தப்பட்டவனுயிருக்கலாமென்று சமுசயித்து கல்கத்தாவுக்கு அனுப்ப, அங்கே, அவன்பேரில் யாதொரு குற்றமும் எற்படத் தகவல் அகப்படாமையினுல் அவனை மறுபடியும் சென்னைக்குக் கொண்டுவந்து போலீஸ் கமிஷனர் அவனை விடுதலை செய்துவிட்டார்.

**பம்பாயில் ஸெடிஷன் கேஸ்கள்**

சென்னையிலும், வங்காளத்திலும் ஸெடிஷன் கேஸ்களின் வைபவம் இப்படியிருக்க, பம்பாயில், இரண்டு மூன்று பத்திரிகைகள் பேரில் ஸெடிஷன் கேஸ்கொண்டுவந்து விசாரணையாகி வருகிறது. அப்படி பிடிபட்டவர்களில் ஸ்ரீ பாலகங்காதர திலகரும் ஒருவர். இவர் கேசரிபத்திரிகையின் ஆசிரயராக பெங்கால் வெடிகுண்டு அக்கிரமங்களைப்பற்றி பெழுதியது இந்தியன்பினல் கோட் 124-A; 153-A. பிரிவுகளின்படி ஸெடிஷன் குற்றமாகிறதென்று பிடித்து விசாரித்து ஹைகோர்ட்டு ஸெஷனுக்கு விசாரணைக் கனுப்பி யிருக்கிறுர்கள். மாஜிஸ்திரேட்டு முன்னும் ஹைகோர்ட்டு முன்னும் திலகரை ஜாமினில் விடும்படி விண்ணப்பம் செய்து கொண்டது பலிக்காமற் போய்விட்டது. இப்பொழுது பம்பாய் ஹைகோர்ட்டில் ஸெஷன்ஸ் கேஸ்கள் விசாரணையாய்க் கொண்டிருக்கிற படியால், இவருடைய கேஸ் சீக்கிரத்தில்தானே இந்தமீ 13௳ விசாரணைக்கு வரும். கனம் மிஸ்டர் ஜஸ்டி தேவார் ஹைகோர்ட்டில் ஸெஷன்ஸ் ஜட்ஜாக உட்கார்ந்து விசாரணைசெய்து வருகிறுர்

**சென்னை ஹைகோர்ட்டு**

சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜியாயிருந்து வேலையை விட்டு நீங்கி மறுதினமே பம்பாய்க்குப் போகும் வழியில் இறந்து போன மிஸ்டர் போடாம் அவர்களுக்கு பதிலாக மிஸ்டர் அப்தர் ரஹீம் என்னும் கல்கத்தா பாரிஸ்டரை ஹைகோர்ட்டு ஜட்ஜாக நியமித்திருக்கிறுர். இவர் கல்கத்தாவில் பிரெஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டாயிருந்து பேர் பெற்று விளங்கிய மகம்மதிய பாரிஸ்டர்.